உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 | குரோதன௵ மார்கழி௴ க௳ | பகுதி 6
1925௵ டிசம்பர்௴ 15௳

## கடவுள் வணக்கம்.

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடு விலோ
அனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்பர்
அகமுருகி மலர்க டேவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளி யிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன் னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியம தனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்க ளோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவு புகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (1)

---

தேகச் செயலறுனும் சிந்தையுட னேகுழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
யல்லிலே வாழ்வாரோ வப்பனே நீயற்ற
வெல்லையிலே சும்மா விரு. (2)

---

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத
சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி. (3)

---

## அரும்பொருள் விளக்கம்.

1. "பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்
பரந்தவண் டமிதென நிலவிசும் பொழிவறக்
கரந்தசில் இடந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும்
கரந்தெங்கும் பரந்துளன் ........."

என்கிறபடி இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறான் என்பது பிரசித்தமாயினும், இப்பாடலிற் குறித்துள்ள இடங்களில், அவ்விறைவன், சகளமாகவும், நிஷ்களமாகவும், சகள நிஷ்களமாகவும் அவசரபேதங்களாக எழுந்தருளியிருந்து தரிசனங்கொடுத்து வருகிறானென்பதனை ஆசிரியர் சுட்டிப் பேசுகின்றார். சகளமாவது அன்பர்கள் விரும்பியவாறு ரூபீகரித்தல்; நிஷ்களமாவது ரூபமின்றி அருவமாயிருத்தல். இப்படிப் பேசுவதிலும், 'தொண்டர்க ளிடத்திலோ நீ வீற்றிருப்பது' என்று கூறி முடித்தமையால் அந்த இடமே இறைவனுக்கு முக்கியமாய், உகப்பிற்கேற்ற இடமென்பதனைக் குறிப்பாற் காட்டி வைத்தனர்.

"தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திரு மேனி தானும்
அண்டருங் கண்டி லாத அண்ணலே யெனவ ணங்கி
வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழறி மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே"

என்று சிவப்பிரகாசரும்,

"இறைவரோ தொண்டரு ளொடுக்கம்"

என்று ஔவையாரும்,

"பொருந்தாதா ருள்ளத்திற் பூமடந்தை கேள்வன்
இருந்தாலும் முள்மே லிருப்பு"

என்று பிறரும் கூறுவதுங் கவனித்தற் குரித்தாம்.

இவ்வண்ணம் இறைவன் வியாபித்திருந்து உள்ளும் புறமு நிகழும் விஷயமனைத்தையும் தெரிந்துகொள்ளுதலை உணர்ந்திருந்தும் பலர் பழி பாவங்களுக் கஞ்சாமல் துர்க்கிருத்தியங்களைச் செய்து வருவது கண்கூடு. இவர்கள் அச்செயல்களைப் புரியும்போது,

"வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு"

என்னு முதியோர் திருவாக்கை அறவே மறந்துவிடுகின்றனர். பெரியாரொருவர் கடவுள் சந்நிதானத்தின் முன்னின்று கைகூப்பி வணங்கும்போது, இத்தகையகாலத்தி லிருக்கவேண்டிய திடசித்தம், பலர்க்கு மாறுபடுவதை உத்தேசித்து அக்குறையைத் தமதாகவே பாவித்து,

"உள்ளத்தே யுறையு மாலை யுள்ளுவா னுணர்வொன் றின்றிக்
கள்ளத்தே தொண்டு பூண்டு தொண்டுக்கே கரைந்து நைந்து
உள்ளுவா ருள்ளமெல்லாம் உடனிருந் தறிதி யென்றே
வெள்கிப்போ யென்னு ளேநான் விலவறச் சிரித்திட் டேனே"

என்றார்.

சர்வ வியாபக கர்த்தாவாகிய இறைவனை நோக்கி "நீ யிருக்கும் இடத்தை வெளிப்படையா யறிவிக்கலாகாதா ?

'மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தா னாகாதா வுனக்கென்ன குறையுண்டோ ?'

என்றொருவர் கேட்கின்றார்.

இக்கருத்தை யெல்லாம் உட்கொண்டே ஆசிரியர் "நீ வீற்றிருப்பது, தொழும்பனேற் குளவு புகலாய்' என்றார்.

அண்டமுடி = அண்ட கடாகத்தின் முகடு (உச்சி).

பகிரண்டம் = வெளியண்டம்.

அலரிமண்டலம் = சூரியமண்டலம்.

அனல் = அக்கினி; மதி = சந்திரன்.

மூர்த்திநிலை = விக்கிரகவடிவு.

திகந்தம் = திக்கின் முடிவு.

சூனியம் = பாழ்.

காலமொருமூன்று = இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.

பிறவிநிலை = ஜன்மநிலை.

தொழும்பன் = தொண்டன்.

2. ஞானம் பெறுதற்கு யோகம் சோபானநிலை (காற்படி).

ஞானமோ மனவியாபாரம். பகிர் முகத்தில் உலக சம்பந்தமாகச் சிறிதுமின்றித் தேகப்பற்று அற்றுநின்ற அவசரம் யோகமாதலின், பெரியோர் யோகத்திலேயே காலத்தினைக் கழிக்காமல் அதற்கப்பாற் செல்வர். அன்னவருக்குப் பிரபஞ்ச மோகமில்லை. அவர் மூன்னிலையற்று மௌன நிலையி லிருப்பரென்பது இப்பாடலின் கருத்து.

குழைதல் = கலந்து நெகிழ்தல்.

மோகம் = ஆசை.

நீயற்ற எல்லை = நீ என்பது (நான் என்னும் அகங்காரம்) அற்றுப்போன இடம்.

3. அழியும்படியான உலகப் பொருள்களிடத்திலும் பயனில்லாத பேச்சிலும் காலமானது வீணே கழிந்து போகவிடாமல் சுகமடைய வேண்டுமாயின் குருமூர்த்தி யனுக்கிரகித்த நல்வழியினையே யடைய வேண்டுமென்பது இதன்கருத்து.

நில்லா = நிலையற்ற.

நின்னை யுள்ளோர் = உன்னை யுள்ளிட்டவர்கள்.

திரள் = கூட்டம்.

# ஆனந்தபோதினி

குரோதனஹு மார்கழிமீ கவ


## மன விகற்பம்

உலகத்தில், சர்வசக்தியும் வாய்ந்த பரம்பொருளால் சிருஷ்டிக்கப்பட்ட எண்ணிறந்த ஜீவர்களுக்கும் மனோசக்தியென்ற ஓர் உயரிய சக்தி உதவப்பட்டிருக்கின்றது. அந்த அபாரசக்தியைக் கொண்டே உலக இயலானது அதியற்புதமாக நடந்தேறி வருகின்றது. இவ்வுலகில் நம் கண்முன் காணப்படும் அளவற்ற அற்புதக் காட்சிகளெல்லாம் அச்சக்தியிலிருந்து வெளிப்படுவனவேயாம். மனிதர் பார்த்துப் பிரமிக்கத்தக்க மந்திரங்கள், தந்திரங்கள், ஆகாயத்தை அளாவிய கோபுரங்கள், விசித்திரக்கட்டிடங்கள், மலைகளினடியிற் செல்லும் சுரங்கங்கள், ஆற்றுவெள்ளத்தி னடியிற்செல்லும் ஆச்சரிய நிலவறை வழிகள், கடக்கமுடியாத நீர்ப்பெருக்கின்மேலுள்ள பாலங்கள், கடல்தாண்டும் மரக்கலங்கள், புகைரதங்கள், ஆகாய விமானங்கள், இன்னும் பல நீராவியந்திரங்கள் முதலியவைகளின் தோற்றங்களுக்கெல்லாம் மூலகாரணம் மனோசக்தியே. நாடு காடாவதும், காடு நாடாவதும், மேடு பள்ளமாவதும், பள்ளம் மேடாவதும், பாழாய்க்கிடந்த இடம் நகரமாவதும், நகரம் பாழிடமாவதும், வெற்றிடம் வீடாவதும், வீடு வெற்றிடமாவதும், ஏழை தனவந்தனாவதும், தனவந்தன் தரித்திரனாவதும், சாதாரணமனிதன் சக்கரவர்த்தியாவதும், சக்கரவர்த்தி சாமானிய மனிதனாய்விடுவதும் இந்த மனோசக்தியினாலேயே நிறைவேறுகின்றன. இன்னும் இந்தச் சக்தி பாம்பின் விஷத்தைப் போக்கும்; பாஷாணக் கொடுமையை மாற்றிவிடும்; நோய்களை அகற்றும்; நெருப்பைச் சுடாதிருக்கச்செய்யும்; நல்லகுணமுடையவைகளைக் கெட்டகுணமுள்ளவைகளாகவும் மாற்றிவிடும். மனிதரால் செய்யமுடியாதவையென்று கருதப்படும் அரியபெரியசெயல்களில் நல்லவற்றையும் இதுசெய்யும்; தீயவற்றை

யும்செய்யும். கடவுள் தன்மையொன்றுதவிர மற்றவைகளையெல்லாம் முடித்துவிடும் ஆற்றல் இதற்குண்டு. இதன் சக்தியைக்கொண்டு செய்யப்படும் கருமங்களினாலேயே மனிதர்க்கு நன்மைதீமைகளும் ஏற்படுகின்றன. மனிதர் தெய்வ வழிபாடுசெய்து போறங்களைப் புரிந்து உயர்ந்த பிறப்புக்களை அடைவதற்கும், சுவர்க்காதி நற்பதவிகளைப் பெறுதற்கும், தவம் யோகம் முதலியன வியற்றிப் பகவான் அடிநிழலைச்சார்ந்து பிறப்பு நீங்கி முத்தியடைதற்கும் இந்தச் சக்தியே காரணமாய் நிற்கின்றது. மனிதர் பாவவழிகளிற் புகுந்து நரகத்தைச் சார்வதற்கும் இதுவே மூலகாரணமா யிருக்கின்றது. இதனை எவரெவர் எந்த எந்த வழிகளில் உபயோகிக்கின்றார்களோ அந்த அந்த மார்க்கங்களுக்குத் தக்க பயனை அடைவார்கள். சிலர், இதனைச் சாதாரண உலகவிஷயங்களிற் செலுத்தி நிலையற்ற பெருமையும் புகழும் பெற்று மறைவர்; சிலர் ஆத்மார்த்தமான விஷயங்களிற் செலுத்திப் பொன்றாப் புகழும், மங்காத வாழ்வும் பெற்று நிலைத்த பேரின்பத்தையும் அடைவார்கள். இந்த அற்புத மனோ தத்துவத்தின் தன்மைகளை, நம் பெரியார் இயற்றிய ஆன்மதத்துவ சாஸ்திரங்களின் உதவியாலும், அமெரிக்கர் முதலிய மேல் நாட்டாரின் மனோதத்துவ சாஸ்திரங்களின் உதவியாலும் நன்குணரலாம்.

இதனை, மேல்நாட்டார் ஒன்றெனக் கொள்கின்றனர்; நம் நாட்டுப் பெரியார்கள், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என நான்கு பிரிவினையுடையதாக்கி அந்தக்காரணமென வழங்குகின்றனர். அதனோடு, "மனமான செயல் நினைக்கும், புத்திவிசாரிக்கும், அகங்காரங் கொண்டெழுப்பும், சித்தமொன்றுவிக்கும்" என்றபடி மனம் ஒரு காரியத்தை நினைக்க, புத்தி ஆராய, அகங்காரம் அதில் ஓர் எழுச்சியை உண்டாக்க, சித்தம் அதனை முற்றுவிக்க ஒருகாரியம் முடிவுக்கு வருமென்றும், ஆகவே ஒருகாரியம் நிறைவேறுதற்கு அந்தக் கரணம் நான்கும் ஒன்றுபடவேண்டுமென்றும், அவை ஒற்றுமையுறாவிடின் எக்கருமமும் பூர்த்தியாகாதென்றும் சாஸ்திரங்களில் சாற்றுகின்றனர். மேல்நாட்டார்களும் மனத்தை ஒன்றெனக்கொண்டாலும் அது பற்பல அணுக்களாகப் பிரியும் இயல்பினதென்றும், அங்ஙனம் பிரிந்து விகற்பப்பட்டபோது அதனால் எதுவும் நடைபெறாதென்றும், அது பிரியாமல் ஒன்றுபட்டு உறுதியானபோது அரிய பெரிய சயல்களை முடிக்குமென்றும் அபிப்பிராயப்படுகின்றனர். இந்த இரண்டு அபிப்பிராயங்களிற் சிறிது பேத மிருந்தபோதி

லும், மனம் விகற்பமுடைய தாகும்போது பயனற்றதாகுமென்பதும், ஒன்றுகும்போது மிக்க பயனுடையதாய் அற்புத ஆற்றல்களையெல்லாம் காட்டிவிடுமென்பதும் துணியப்படும். மனவுறுதியும், ஒற்றுமையும் பெருஞ் செயல்களை முடிக்கக்கூடியனவென்பதை எத்தேயத்தாரும், எம்மதத்தினரும் ஒப்புக்கொள்ளுவர்.

இத்தகைய அரிதினும் அரிதாகிய பேராற்றல் வாய்ந்த மனோசக்தியை அடைந்த பேரறிஞர் பலரும், விநாடிக்கு ஆயிரம் விதங்களாகப் பிரிந்து பல்வேறு விஷயங்களிற்சென்று ஒன்றினும் நிலைபெறுமல் தாவித்திரியும் அதனை, அங்ஙனம் பிளவுபட்டுப் பயனற்றதாகிவிடாமல் அடக்கி ஒருவழியிற் செலுத்தி ஒப்பற்ற உயர்செயல்களைப்புரிந்து உலகினுக்குப் பயனுடையவர்களாய் விளங்கி வருகின்றனர். இங்ஙனம் காரியம் முடிப்பதில் ஒருவரே தம்முடைய மனவொன்றிப்பினுல் முடித்தலுமுண்டு, பலர் சேர்ந்து தம்முடைய மனோசக்திகளை ஒன்ருக்கி முடித்தலுமுண்டு. ஆகவே மனோசக்தி ஒன்ருே பலவோ ஒற்றுமையடைவதனுலேயே காரியசித்தி யுண்டாமென்பது எல்லோருக்கும் விளங்கும். இவ்வாறு மனோசக்தி மிக்க வன்மையுடையதாயிருந்தும், அதனுல் அறிஞர், முடிக்காதவற்றையும் முடித்துப் பலராலும் கொண்டாடப்பட்டுவந்தும் நம் நாட்டில் சிலர், அதனை விகற்பப்படுத்திப் பல்வேறு வழிகளிற் செலுத்திப் பயனற்றதாகச் செய்துவிடுகின்றனர்.

இவ்விரு வகுப்பாரின் தன்மைகளை நம் ஆனந்தபோதினிச் சந்தாதாரர்களும், விஷயதானம் புரிவோர்களும், வாசகர்களுமாகிய நண்பர்களின் மனப்போக்கைக்கொண்டே நன்குணர்ந்து கொள்ளலாம்:—பெரும்பான்மையாகிய நண்பர்கள்-ஆயிரத்துக்குத் தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பதுபேர்-பத்திரிகாபிமானம் ஒன்றிலேயே ஏகோபித்து மனத்தைச்செலுத்தி, நம் பத்திரிகையில் மனித சுபாவத்தால் சிறு தவறு நேரினும் அதை எட்டுணையும் பாராட்டாது, பத்திரிகாபிவிருத்தியையே விரும்பி அதற்கு வேண்டிய உதவிபுரிந்தும், பயனுடைய வியாசங்களை எழுதியும் அதனை வளர்த்து வருகின்றனர். நாமும் அவர்களுடைய மனநோக்கத்தைத் தழுவியே பெரும் பான்மையும் பொதுநோக்கத்துடன் பத்திரிகையை நடத்தி வருகின்ருேம். அதனுலேயே நம் போதினிக்குச் சகல மதஸ்தர்களும் சந்தாதாரர்களாகச் சேர்ந்திருக்கின்றனர்.

மேன்மேலும் சேர்ந்துகொண்டும் வருகின்றனர். நம் பத்திரிகை அதிக சந்தாதாரர்களை யுடையதாகவு மிருக்கின்றது.

இங்ஙனமிருப்ப, இப்பத்திரிகையின் இயற்கையையும் நோக்கத்தையும் உணராதசிலர்—இருபதினாயிரம் சந்தாதாரர்களில் சுமார் இருபதிற்குறைந்த நண்பர்கள்—நம் பத்திரிகையின் விஷயத்தில் மன விகற்பங்காட்டி நமக்கு வீண்சிரமத்தை யுண்டாக்கி வருகின்றார்கள். இவர்கள் சில வியாசங்களை எழுதி நமக்கனுப்பிவிட்டு அவை விரைவில் பத்திரிகையில் வெளிவரவில்லையென்று குறைகூற ஆரம்பிக்கின்றனர். அங்ஙனம் குறைகூறி எழுதும் கடிதங்களில் உபயோகிக்கத் தகாத வார்த்தைகளைக் கலந்தெழுதிவிட்டு, 'உங்கள்மீது அபிமானத்தால் இவ்வாறு எழுதுகிறோம்' என்று வரைகிறார்கள். சிலர், 'ஏன் எம்முடைய வியாசம் வெளிவரவில்லை; பிரசுரிக்க இஷ்டமில்லாவிட்டால் உடனே எமக்குத்திருப்பி அனுப்பிவிடுங்கள்' என்று வாரத்துக்கொரு கடிதம் தவறாமல் எழுதிவிடுகிறார்கள். சிலர், 'பத்திராதிபர் பக்கங்கள் அதிகமாக எடுத்துக்கொண்டு பழய நீதிகளையே எழுதி வருகின்றீர்கள்; அவற்றைச் சுருக்கிக்கொண்டு எமது வியாசத்தை ஏன் பிரசுரிக்கலாகாது' என்று எழுதுகிறார்கள். சிலர், 'பயனற்ற வியாசங்கள்பல போதினியில் வெளி வருகின்றன; உங்கள் பத்திரிகைப் புகழ்ச்சியே அதிகமாக வருகின்றது; வீண் வினாவிடைகளைப் பிரசுரிக்கிறீர்கள்; பழய நாலடியார் நீதியும் குறள் நீதிகளும், நாவல்களும் வெளிவருகின்றன; இவற்றால் யாருக்குப்பயன்? இவற்றைத்தள்ளி எமது வியாசத்தை ஏன் பிரசுரித்தல் கூடாது; இவற்றிலும் எமது வியாசம் குறைந்ததா' என்று எழுதுகிறார்கள்; சிலர், 'எமது வியாசத்தை அடுத்தமாசம் பத்திரிகையில் வெளியிடாவிடில் பின் என்ன நடக்கிறதென்பதைப் பார்த்துக்கொள்வீர்கள்' என்று வஞ்சினங் கூறுகிறார்கள்; சிலர், 'எமது வியாசத்தைப் பிரசுரிக்காவிட்டால் அதிக சந்தாதாரர்கள் பத்திரிகையைத் திருப்பிவிடுவார்கள்; இப்படி எம்போன்றவர்களுடைய வியாசங்களை வெளியிடாததனாலேயே வருஷ ஆரம்பத்தில் அதிக சஞ்சிகைகள் வி.பி. யில் திரும்புகின்றன' என்று பயங்காட்டுகின்றார்கள்; சிலர், 'எங்கள் ஜில்லா வியாசங்கள் வெளிவருவதில்லை' என்கிறார்கள்; சிலர், 'எங்கள் ஜாதி வியாசங்கள் பிரசுரிக்கப்படுவதில்லை' என்கிறார்கள். இன்னும் இவர்களிடமிருந்து எத்தனையோ விகற்ப அபிப்பிராயக் கடிதங்கள் வருகின்றன. அவற்றையெல்லாம் எழுதுவதென்றால் பத்திரிகையின் இடம் வீண் உபயோகமாகும்.

இப்படி எழுதும் இவர்கள், பிறர்மீது குற்றங் கூறுமுன், தம் முடைய அபிப்பிராயம் சரியானதாவென்பதையும், பொதுவாக உலகத்தா ரெல்லோருமே போற்றத்தக்கதாவென்பதையும் ஆராய்ந்து பார்த்தெழுத வேண்டும். 'உலகம் பலவிதம்' என்றபடி ஒருவர் அபிப்பிராயம் மற்றொருவருக்குப் பொருந்தாமலே யிருக்குமென்பதை இவர்கள் ஆராய்வதில்லை. இவர்கள் உயர்ந்ததெனக் கூறுவதே இன்னும் பலருக்குத் தாழ்ந்ததாகக் காணப்படலாம். நம்மிடம் இத்தகைய பலரால் எழுதப்படும் வியாசங்களில் சில மத தூஷணை யுடையனவா யிருக்கின்றன; சில ஜாதி துவேஷத்தை யுண்டாக்கக் கூடியனவா யிருக்கின்றன; சில வேறு பல விபரீதங்களை யுண்டாக்கக் கூடியனவா யிருக்கின்றன; சில, எழுத்துப்பிழைகள், இலக்கணப் பிழைகள் மலிந்தனவா யிருக்கின்றன. ஒவ்வொருவருடைய மனதையும் திருப்திசெய்வதற்காக நாம் எல்லாவற்றையும் பிரசுரிக்க ஆரம்பித்தால் பலருக்கும் அதிருப்தி யுண்டாகும். ஆதலால் நாம் பொது ஜனங்களுக்கு அதிருப்தி யுண்டாகாதபடியிருக்கும் வியாசங்களையே ஆராய்ந்து வெளிப்படுத்தி வருகின்றோம். அவற்றுள் தொடர்ச்சியாக வரும் வியாசங்கள் மாதந்தோறும் வெளியிடப்படுகின்றன; வழுவின்றியிருப்பவை சிரமமின்றி வெளியிடப்படுகின்றன; அதிகப் பிழைகள் மலிந்தவை மிக்க பிரயாசையுடன் திருத்தப்பட்டு வெளிவருகின்றன; பாரபக்ஷமாகவோ தற்பெருமையாகவோ நாம் எதையும் வெளியிடுவதில்லை. நாம் வெளிப்படுத்தும் எதையும் ஏதேனுமொரு முக்கிய காரணத்தைக் கொண்டே வெளிப்படுத்துவோம். ஆதலின், வியாசங்களின் விஷயத்தில் குறை கூறும் நண்பர்கள் அவ்வழக்கத்தைவிடுத்து, மனதை விகற்பமான வழியிற் செலுத்தாமல் நன்னெறியாகிய ஒரேமார்க்கத்தைக் கடைப்பிடித்துப் பத்திரிகாபிமானம் வைப்பாராக. வியாசங்களைத் திருப்பி யனுப்பவேண்டுமென்று எழுதும் வழக்கத்தையும் நிறுத்திக்கொள்வாராக. பத்திரிகை நடத்தும் பெரிய பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் நமக்கு, வியாசங்களைத் திருப்பி யனுப்புதலும், ஏன் பிரசுரிக்கவில்லை யென்பதற்குப் பதில் எழுதுதலுமாகிய இத்தகைய பல அனுவசியமான வேலைகளைக் கொடுப்பதால் எத்தகைய சிரமமுண்டாகு மென்பதைக் கவனிப்பாராக. இனி வியாசமனுப்புவோர் தேவையானால் தங்களிடம் ஒரு காப்பி வைத்துக் கொள்ளவேண்டுமே யன்றித் திருப்பியனுப்புமாறு கடிதமனுப்ப

லாகாது. அதைப்பற்றிக் குறைகூறலு மாகாது. நாம் வியாசங்களைப்பற்றி நம் சஞ்சிகை ராப்பரின் 2-வது பக்கம் 7-வது பாராவில் எழுதியிருப்பவற்றைக் கவனிக்க. அவசியமாக விடையளிக்க வேண்டிய கடிதங்களுக்கு விடை யளிப்போம். நண்பர் தெரிவிக்கும் சிறந்த அபிப்பிராயங்களை எடுத்துக்கொள்வோம். இன்னும் இவ் விஷயத்தைப்பற்றி எழுதவேண்டியவை எவ்வளவோ உண்டு. எனினும் விரிவஞ்சி விடுத்தோம்.

ஆதலின், நண்பர்கள் பலரும் தங்கள் அரிய மனோசக்தியைச் சிறந்தவழியில் உபயோகித்து நற்பயனடையச் செய்யுமாறு எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுவாம்.

ஓம் தத் ஸத்.

---

## தனித்தமிழும் ஆங்கிலமும்.

உமாதேவியாரை யிடதுபாகத்திற் கொண்டு மழவிடைமீ திவர்ந்து வரும் இறைவன் முதன்முதலில் வடமொழியைப் பாணினி முனிவருக்கும், தென்மொழியைக் குறுமுனிக்கும் உலோகோபகாரமாக உபதேசித்தருளினர். அன்றுதொட் டின்றுவரையில் தமிழ்மொழியினால் நம்நாட்டில் மலிந்த சாற்றற்கரிய பெருஞ் செயல்களை நாம் பண்டைய நூற்களின் மூலமாய் இன்று உணர்ந்து வருகின்றோம். ஆகவே அமிழ்தினு மினிய தமிழ் மொழியின் செம்மையையும், அருமையையும், அற்புதத்தன்மையையும் நூலாராய்ச்சியின் மிக்க நிபுணர்கள் வரைந்து வருகின்றார்கள். அதனால் தமிழின் பெருமையை மீண்டும் இவண் வரைவதைவிட்டு மேலே செல்வாம்.

தென்மொழியும், வடமொழியும் ஒரேகாலத்தில் சர்வஜீவதயாபரனாகிய இறைவனால் வெளியிடப்பட்டதனால் நம்முன்னோர்கள் இரண்டு மொழிகளையும் கற்றுவந்தனர். பின்பு, பல அரசர்களின் மாறுதல்களினால் ஒவ்வொன்றின் விருத்தியுங் குறைவுபடத் தலைப்பட்டது. அதன் பயனாய்த் தற்போது வடமொழி உலகவழக்கற்று, எழுத்தளவில் மாத்திரம் இருந்து வருகின்றது. ஆனால் தமிழ், வடமொழியைப்போல் உலகவழக்கில் அழிந்துபோகாமல் இருந்து வருகின்றது.

வடமொழியையும் தென்மொழியையும் நம் முன்னோர்களிற் பலர், கலந்து கற்றுவந்தனர். அதனால் அன்னோரியற்றியருளிய நூல்களிலும் தமிழுடன் வடமொழி வார்த்தைகளையுங் கலந்துபோந்தனர். அவ்வண்ணம், தமிழையும் வடமொழியையுங் கலந்துண்டாக்கிய நடைக்கு "மணிப்பிரவாளநடை" யென்னும் பெயர் கொடுக்கப்பட்டது. இம்மணிப்பிரவாள நடையினால் தமிழ்வார்த்தைகள் பல மறைந்துவர ஏதுவாயிற்று.

இம்முறையால் தனித்தமிழ் சிதைவுற்றது. இன்று தமிழ் கற்க விழை யுந் தமிழர்கட்கே, தனித் தமிழ் வார்த்தைகள் இன்னவென்று கண்டறி யக்கூடவில்லை. நாம் தமிழ் வார்த்தைகளாகக் கருதியவைகளிற் சில வட மொழி வார்த்தைகளாகவே யிருக்கின்றன.

சாதாரணமாக, நாம் வழங்கிவரும் வார்த்தைகளாகிய "கோபம்" "சாட்சி" முதலியவைகளெல்லாம் வடமொழி வார்த்தைகளே! அவை கட்கு நேரான தமிழ்வார்த்தைகள், "சினம், கரி" யென்பனவாகும். நாம் உலகவழக்கில் சினம், கரி முதலியவைகளை யடிக்கடி வழங்காமல் கோபம், சாட்சி முதலியவைகளையே வழங்கி வருகின்றோம்.

இன்னும் இவைபோன்று பல வார்த்தைகள் தமிழில் மறைந்து வட மொழியில் வழங்கப்பட்டு வருகின்றன இதைக்கொண்டு நோக்குமிடத் துத் தனித்தமிழ் முன்னரே சிறிது மறைந்துவிட்ட தென்னலாம்: யாதொரு கலப்புமற்ற தனித்தமிழ், வடமொழியால் தன்னுடைய வார்த் தைகளையெல்லாம் ஒருபுறம் இழந்து வந்தது. அது, போதாக்குறைக்கு, இன்னும் தமிழின் வார்த்தைகளை மங்கவைக்க ஆங்கிலமும் அதனுடன் சேர்ந்து வருகின்றது. தமிழ் ஒருபுறம் வடமொழியினாலும் மற்றொரு புறம் ஆங்கிலத்தினாலும் கொள்ளப்பட்டால் "தனித்தமிழ்" என்ற சொல் தான் எங்கே? அந்தோ! தமிழே! தமிழணங்கே! உன்கதி! என்னும்!

(தொடரும்.) மு மாணிக்க நாயகர். தமிழாசிரியர்,
திருப்புவனை, புதுவை.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(203-ம் பக்கத் தொடர்ச்சி.)

### " இணக்கமறிந் திணங்கு "

" (மனிதனே!) இணக்கம் — (ஒருவனிடம் சிநேகம் செய்வதற்குத் தகுதியான) பொருத்தத்தை (அதாவது நற்குண நற் செய்கைகள் பொருந்தி யிருப்பதை), அறிந்து = தெரிந்துகொண்டு, இணங்கு = (பின் னர்நீ) சிநேகஞ் செய்வாயாக" என்பது இதன்பொருள்.

ஒருவர், மற்றொருவரோடு சிநேகஞ் செய்வதாயிருந்தால், அவர்க ளிடம் நற்குண நற்செய்கைகள் இருக்கின்றனவா என்று ஆராய்ந்து, அக் குணங்கள் பொருந்தி யிருந்தால் மாத்திரம் அவர்களோடு உறவுகொள்ள வேண்டும். அத்தகையாரின் சிநேகத்தால் அவர்க்குப் பற்பல நன்மைக ளுண்டாகும். அவர்கள், தங்கள் நண்பருக்குத் துன்பம் வந்தகாலத்தில் துணைபுரிந்து அந்த அல்லலை அகற்றுவார்கள்; இன்னும் நண்பர்பொருட்டு உயிரையும் வழங்குவார்கள். இத்தகைய அருமைக் குணங்கள் வாய்ந்தவ ரோடு சிநேகங்கொள்ளாமல், வஞ்ச எண்ணங்கொண்ட பஞ்சமாபாதக

ரோடு சிநேகங்கொண்டால் அங்ஙனம் கொண்டவர்க்கு அவரால் ஆபத்துக்கள் பலவுண்டாம். அங்ஙன முண்டாமென்பதை அடியில் வரும் கதை விளக்கும்:—

ஒருநகரத்தில் மிக்க பரோபகாரியாகிய தனவந்த ரொருவர் இருந்தார். அவர், கபடற்ற சிந்தையுடையவர்; எவரையும் நம்பும் இயல்புடையவர். அவரிடத்தில், ஒருநாள், தாடியும் சடையும் வளர்த்த பெரியவர் ஒருவர் வந்து, "நமக்குப் பல சித்தர் ஔடதங்கள் தெரியும்; அவற்றை நாம் செய்து முடித்துக்கொண்டால் பொதுஜனங்களுக்கு மிக்க நன்மைபுரியலாம்; அவற்றை முடித்துக்கொள்வதற்கு இந்நகரமே தகுதியானதா யிருக்கின்றது; ஆதலின், இந்நகரத்தில் நாம் தங்குவதற்கு ஓர் இடங்கிடைத்தால் அனுகூலமா யிருக்கும்" என்று கூறினர். அவர், அந்தப் பெரியவருடைய உண்மைக் குணங்களை உணர்ந்துகொள்ளாமல், அவர் கூறியவற்றை உத்தமமான காரியங்களென்று நம்பி, அவருக்குத் துணைபுரிய வேண்டுமென்று நினைத்து அப்பொழுதே அவரிடத்தில், "சுவாமி! தாங்கள் இடத்திற்குக் கவலைப்படவேண்டாம்; நம் வீட்டிலேயே வசிக்கலாம்" என்று அவரைத் தம் இல்லத்திற்சேர்த்துத் தினந்தோறும் அவருக்கு நெய்யும் பாலும் பொங்கலும் ஊட்டிப் பற்பல உபசாரங்களை புரிந்து வந்தார். பெரியவர், வேளை தவறாமல் விலாப்புடைக்கப் பெருந் தீனி தின்று ஏதேதோ மருந்துகள் முடிப்பவர்போலச் சில காரியங்களைச்செய்து சந்தோஷமாகக் காலத்தைக் கழித்து வந்தார். நாளேற நாளேற அவர் விஷயத்தில் அந்த வீட்டுக்காரருக்கு அதிக நம்பிக்கை யுண்டாகிவிட்டது. அதனால், அவர் தம்முடைய சிறந்த ஆபரணங்கள், திரவியங்கள் முதலியன இருக்கும் இரகசியமான இடங்களையெல்லாம்கூட அப்பெரியாருக்குக்காட்டி அவரிடத்தில் மிக்க விசுவாசம் பாராட்டிவந்தார். பெரியவர், அந்தப் பொருள்கள் இருக்கும் பெட்டிகள், அறைகள் முதலியவற்றைத் தெரிந்துகொண்டதோடு அவற்றின் சாவிகள் வைக்கு மிடங்களையும் தெரிந்துகொண்டிருந்தார்.

இப்படி யிருக்கும்போது ஒருநாள் இரவு அவ்வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் ஆகாரமுண்டு படுத்துக்கொள்ளப்போகுந் தருணத்தில், அந்தப் பெரியவர் ஒரு லேகியத்தைக் கொண்டுவந்து, "இது மிக அருமையாக என்னால் செய்யப்பட்டது; அற்புத குணங்களைத் தரக்கூடியது; இதைத் தின்றுபாருங்கள்" என்று அதிற் கொஞ்சம் கொஞ்சம் எடுத்துருட்டி வீட்டுக்காரராகிய பிரபுவுக்கும், மற்ற எல்லோருக்கும் கொடுத்தார். யாவரும் அதனை விருப்பத்துடன் வாங்கி உட்கொண்டார்கள். அவர்களெல்லோரும் படுத்தவுடனே அந்த லேகியம் அவர்களுக்கு மிகுந்த நித்திரையை உண்டாக்கிவிட்டது. சகலரும் அவ்வாறு மெய்ம்மறந்து தூங்கியபோது பெரியவர் எழுந்து பதறாமல் பயப்படாமல் அந்தப் பிரபுவின் சாவிகளையெடுத்து அறைகளையும் பெட்டிகளையும் திறந்து அவற்றில் இருந்த பொருள்களை

யெல்லாம் அபகரித்துக்கொண்டு பூனைபோல் வெளியேறி அப்பொழுதே கல்கத்தா மெயிலிலேறிக் காணுமற் போய்விட்டார். அவர் உண்மையில் பெரியவருமல்லர், மருந்துமுடிக்க வந்தவருமல்லர்; தந்திரத் திருடர்களில் ஒருவர். ஆனதால் இவ்வாறு அந்தத் தனவந்தரைச ஸ்நேகங்கொண்டு அவருடைய இரகசியங்களை உணர்ந்து அவர்க்கும் மற்றையர்க்கும் சமயம் பார்த்து மயக்க மருந்து கலந்த லேகியத்தைக் கொடுத்து மிக்க நித்திரையை யுண்டாக்கி அவர் வீட்டுப் பொருள்களையெல்லாம் கைப்பற்றிக் கொண்டோடினூர்.

அந்த மருந்தின் மயக்கத்தால் பிரபுவும் மற்றவர்களும் பெருந் தூக்கத்திலிருந்து மறுநாள் மத்தியானத்துக்குமேலேதான் கொஞ்சம் நித்திரை மயக்கம் தீர்ந்து எழுந்தார்கள். அங்ஙனம் எழுந்ததும் பிரபு, பெரியவர், தம் பொருள்களைத் திருடிக்கொண்டு மறைந்தோடிச் சிறியவராய்விட்டதைத் தெரிந்து, "ஒருவனுடைய இயற்கையை உணராமல் அவனோடு ஸ்நேகங்கொள்ளும் மனிதர்க்கு இத்தகைய தீங்குதான் நேரும்" என்று வருந்தினூர். அவர்க்கு அந்த மருந்தின் மயக்கம்தீர்வதற்குச் சில தினங்கள் சென்றன. (தொடரும்.)

செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---

## பத்திரிகைகளும் அவற்றின் பயனும்.

பத்திரிகை என்பது பத்திரம் என்ற பகுதியினடியாய்ப் பிறந்த காரணப்பெயர். உவமை குறித்துவந்த பத்திரம் என்ற ஒரு சொல், தளிர், அழகு, இறகு, ஆயுதம், அம்பு என்ற பல பொருளைக் குறிக்கும். அந்த உவமான உவமேயங்களைச சிறிது ஆராய்வாம்:

1. தளிர்—வித்து என்ற பகுதியினடியாய்ப் பிறந்தது. வேதங்களே வித்தாகவும், ஆகமங்கள், ஸ்மிருதிகள் என்பவை அவ்வித்தினின்றுண்டான *பாரரைகள், சாகைகளாகவும், புருடார்த்த நூல்கள் அதன் கொத்துக்களாகவும், சீவான்மாக்களின் அறிவு விளக்கம் உலகமுன்னேற்றம் அரிய விடயங்களைப் பகிரங்கப்படுத்தல் முதலிய பொறுப்பேற்று நல்லாசிரியராற் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகளே தளிராகவும், பத்திரிகைகள் போதிக்கும் உண்மை நீதிகளைக்கேட்டுச சிந்தித்துத் தெளிந்து அடையும் பக்குவங்களே தளிர் அடுக்கினின்றுண்டாகும் அரும்பு, மலர், காய், கனிகள் ஆகவும் யூகிக்கலாம். "விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கும், அரும்பு மலர் காய் கனிபோலன்றோ பராபரமே" என்றனர் தாயுமானூரும். ஆகவின் பத்திரிகையின் வியாசங்கள், பற்பலவாய்க் கற்பனையாய் விரியினும் அவ்விரிவு வேதாகம சாரங்களை யொட்டி வருவதேயாம்.

2. அழகு—மேற்போந்த தளிர், மரத்திற்கும், நிலத்திற்கும் கண்கவரும் பசசென்ற வனப்பை யீவதும், தலையிற் கோடை வெப்ப முதலியன

*பாரரை—பருத்த அடிமரம.

தாங்கி அண்டின மக்கட்கு உள்ளமு மூடலூந் தண்ணெனச் செய்வதும் போல், பத்திரிகைகள், நூல்கட்கும், ஆசிரியர்கட்கும், போதனையாற் சேர்ப்படு மூலகத்துக்கும் ஒருங்கே அழகுதர நிற்றலாம். அன்றியும்

"சுருங்கச்சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்தல்
ஓசையுடைமை யாழமுடைத்தாதல்
முறையின்வைப்பே யுலகமலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுதனூலிற்கழகெனும்பத்தே"

என்ற நன்னூலார் கூற்றுப்படி இவ்வழகுகளை யேற்று நிற்பதே பத்திரிகைகளின் இலக்கணமாம்.

3. இறகு—பக்ஷிஜாதிகளிற் சனித்த ஒவ்வொரு பிராணிகட்கும் இறக்கை ஒன்றில்லாவிடின் அவைகளின் சென்மம் வீணாம். உளதேல், சரீர அழகு, சரீரபோஷணை, சுதேச்சையாய்ச் சஞ்சரித்தல் முதலியவைகட்கு உபகாரமாய்ச் சென்மத்தையும் ஈடேற்றும். அவைபோல், மனிதர்க்குக் கல்விஞானமாகிற இறகு இல்லாவிடின் அவர்கள் பயனற்றவராவார்கள். இறகாகிறவிஷய உணர்ச்சியில்லாத நம் நாட்டுப்புறவாசிகளிடம், நாட்டைப்பற்றியோ, மதங்களைப்பற்றியோ, முன்னோர்களைப்பற்றியோ, அரிய விஷயங்களை விசாரித்தால் அவர்கள் தக்க பதிலுரையார்கள்; அது முயற்கொம்பாய் முடியும். அவர்க்கு அந்தக் கல்வி யிறகிருந்தால் அது பற்பல விடங்கட்கும் பறந்துபோய் அவர்களின் புகழைப் பரப்பும். பத்திரிகைகளோ இறகுகளைப்போல் அறிஞரின் உரைகளாகிய பற்பல சாரங்களை யெடுத்து உலகெலாம் பறந்துவந்து அவர் ஆற்றலைப் பரப்பி நம்மனோர்க் கெளிமையினுதவும்.

4 ஆயுதம் (அம்பு) இது குறித்த ஒன்றை வசப்படுத்தி யளிப்பதுபோலப்—பத்திரிகை, சீவர்களைப் பந்தித்து நிற்கும் பாசவலையை அறுத்து, சிவசிருட்டி நசி[illegible]னும் = சீவசிருட்டியை நசியாது வளர்த்துவரும் அஞ்ஞானப் பகையைத் தொலைத்து மெய்ஞ்ஞான நிலையை நிறுவி வெற்றிதரவல்லது.

5. பத்திரம் என்பது பாதுகாப்பு, சீவாதாரமான சாசனங்கள் ஆகிய இவைகட் குலகவழக்கில் வழங்கிவருகிறது. இவ்வுலக வாழ்க்கைக்குள்ள சாசனவகையராக்களை நாம் எவ்வளவு சாக்கிரதையாய்ப் பெட்டிக்குள் பெட்டியாயிருக்குமிடத்திலிட்டுப் பூட்டின்மேற் பூட்டுப்போட்டு வைக்கிறோம். அதுபோல் இகபரமிரண்டிற்கும் ஒத்தாசை செய்யும் பத்திரிகைகளை மேற்போக்காய்ப் பார்த்துவிட்டுப் புத்தக அட்டைகட்கும் மிட்டாய்க்கடைக்கும் பிரயோசனப்பட விட்டு விடாமல் குருவின் உபதேசம் போன்று பாதுகாக்கவேண்டும். "முன்னோர் மொழிபொருளேயன்றி யவர் மொழியும், பொன்னே போற் போற்றுவம்" என்றனர் நன்னூலாரும். ஆகலின் விஷய அட்டவணையுடன் புததகரூபமாயுள்ள பத்திரிகைகளைப்

பாதுகாக்கவேண்டுமென்பதைப் பத்திரம் என்ற சொல் விளக்கி நிற்கின்றது.

6. எந்நாடு முன்னேறிப் பொன்னுடென விளங்குமோ அந்நாட்டின் முன்னணியில் நிற்பது கல்வியென்பதை யெவருமறுக்கார். கல்வி எவ்வளவு பின்வாங்கி நிற்குமோ அவ்வளவு நாடுகள் தாழ்ந்த நிலைமையடையு மென்பதும் சகசமே. இதைப்பற்றி நமது ஆனந்தபோதினியின் உண்மையுரை விளக்கிக் காட்டியிருப்பதையே மீண்டும் ஞாபகப் படுத்துகிறேன்.

படித்தவர்கள் தொகை.

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்வீடன் | 100-க்கு | 97 | இந்தியா சுதேசியம் | ... 3 |
| ஜர்மெனி | ,, | 91 | பிரிட்டிஷ் இந்தியா | ... 7 |
| ஜப்பான் | ,, | 90 | | |
| இங்கிலாந்து | ,, | 87 | | |
| பிரான்ஸ் | ,, | 78 | | |

நண்பர்களே! இவ்விதமாய் நம் நாட்டில் நூற்றுக்கு மூன்றுபேர் கல்வியாளர்களா யிருக்கிறார்கள். இவர்களில் சிலர் கையெழுத்துச் செய்ய மாத்திரம் கற்றதுண்டு; ஆன்மார்த்தமான கல்வியில் சிலர் உண்டு; உயர்தரப்பட்டம் பெற்றுச் சேவகாவிர்த்தியில் ஜீவிப்பவர் பலர் உண்டு; இவர்களைக்கொண்டு நாடு முன்னேற்ற மடையக் கூக்குரலிடுவது விந்தையினும் விந்தையே.

7. ஆனால் என்றைக்குச் சனங்கள் எல்லாம் படித்துக் கல்விமான்களாவது? நாடு முன்னுக்கு வருவது? என்று சிலர் வினவலாம். கல்வி பயிலா விடினும் கேள்விப் பயிற்சியாவது வேண்டும். "கற்றிலனாயினும் கேட்க வஃதொருவற் கொற்கத்தினாற்றாந்துணை" என்று நாயனாரே விடைபகர்ந்துளர். எவை கேட்டறிய வேண்டுமென்பது சிந்திக்கற்பாலது. பலர்க்கோ:—

1. நம் நாட்டின் புராதன நிலைமையும் தற்கால நிலைமையும் தெரியா.

2. நமக்கும் அரசாங்கத்துக்கு முள்ள சம்பந்தம் என்ன? எவ்வாறு ஆளப்படுகிறோம்? என்பது தெரியாது.

3. இன்னின்ன தேசங்கள் இந்த இந்த இடங்களிலிருக்கின்றன, இன்ன சமாசாரம் நடக்கிறதென்பது தெரியாது.

4. நாம் மக்களாய்ப் பிறந்ததில் சுயாதீனமுள்ளவர்களா யிருக்கவேண்டாமா? அதற்கெவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பது தெரியாது.

8. இவைகட்கெல்லாம் எந்தச் சாஸ்திரம் கற்கவேண்டு மென்றால், இத்யாதி குறைகளை நிவர்த்திக்கவும், பலவிதமான உலகஞானங்களைப் போதிக்கவும், பண்டைய நாள் தொடங்கி யிந்நாள்வரையுள்ள நம்நாட்டின் ஆன்மார்த்த ஞானங்களை விளக்கவும், ஒரே நூல் உண்டு. அதுதான் பத்திரிகை. பத்திரிகையின் சஞ்சிகைகளை அபிவிருத்தியடையச் செய்வதே நம் முதற்கடமையாகக் கொள்ளவேண்டும்.

மே. சீ. சிதம்பரசாமிக் கவுண்டன்,
மூலனூர், தாராபுரம் தாலூகா.

# மாதர் நீதி மஞ்சரி.

(163-ம் பக்கத் தொடர்ச்சி.)

வாசுகியம்மையார்:—இவர் எச்சாதியாரும் எச்சமயத்தாரும் உச்சி மேற்கொண்டு மெச்சும்படியான அருமை பெருமை வாய்ந்த திருக்குறள் என்னும் நீதிநூலைத் திருவாய்மலர்ந்த தெய்வப்புலவராகிய திருவள்ளுவரின் மனைவியாவர். (இவரைப்பற்றி இதற்குமுன் பல விடங்களில் கூறியிருத்தலின் இங்கு அதிகமாக எழுதவேண்டிய அவசியமில்லாமற் போயிற்று) இவர் கணவன் வார்த்தையை மீறினதேயில்லை. இவர் தூங்கினதை வள்ளுவர் தாம் ஒருநாளும் பார்த்ததேயில்லை என்று சொல்லியிருக்கிறார். கணவன் தூங்கப் போகும்போது அவருக்குக் கால் பிடித்துக்கொண்டேயிருந்து அவர் தூங்கியபின்பு தாம் சயனிப்பார். அவர் நித்திரையினின்று விழிப்பதற்குமுன்பே தாம் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, அவர் விழித்ததும் தம் முகத்தில் விழிக்கும்படி லட்சுமிகளையோடுகூடிய முகத்துடன் அவரெதிரில் நிற்பார். எச்சமயத்திலும் கணவனுக்குமுன் அவர் அன்னம் புசித்ததேயில்லை. கணவன் எதைச் செய்யச்சொன்னாலும் ஏன் இப்படிச் செய்யச் சொல்லுகிறீர் என்று கேளார். திருவள்ளுவர் இஷ்டப்பட்டால் மிக்க செல்வமுள்ளவராகலாமாயினும் அவர் அச்செல்வ வாழ்க்கையை இச்சியாமல் தரித்திர நிலைமையிலேயே யிருந்தார். ஆகவின் வாசுகியாரும் அவ்வறுமையைப் பொருட்படுத்தாமல் அவரையே கடவுளாகக் கருதித் தொழுது வந்தார். 'இல்லானை இல்லாளும் வேண்டாள்' என்னும் பழமொழி அவர் விஷயத்தில் பொய்யாயிற்று.

ஒருநாள் ஒருவர் வள்ளுவரிடம் போய் 'ஐயா! இல்லறம் சிறந்ததா? துறவறம் சிறந்ததா?' என வினவினர். அதற்கு அவர் யாதொன்றும் விடை யிறுக்காமல் தம் மனைவியார் அரிசி குற்றும்போது அவரைக் கூப்பிட்டார். உலக்கையை மேலே ஓங்கிய அவ்வம்மையார் அதை அப்படியே விட்டுவிட்டு இதோ வந்தேன் எனக் கூறிக்கொண்டே ஓடிவந்தார். மேலே தூக்கிவிட்ட உலக்கை கீழே விழாமல் அப்படியே அந்தரத்தில் நின்றது. மற்றொருசமயம் தமக்குப் பழைய அன்னம் போட்டபோது வள்ளுவர் மனைவியைப்பார்த்து "பழையது சுடுகிறது; விசிறி கொண்டுவந்து விசிறு" என்றார். அம்மையார் அப்படியே செய்தார். பின்னொருமுறை பகலில் செய்குழல் கீழேவிழ அதைத் தேடியெடுக்க விளக்குக் கொண்டுவா என்றார். அவர் அப்படியே கொண்டுவந்தார். கிணற்றில் நீர் சேந்திக்கொண்டிருந்தபொழுது வள்ளுவர் கூப்பிடலும் அம்மையார் சேந்த கயிற்றை அப்படியே விட்டுவிட்டு வந்துவிட்டார். அத்தோண்டி பாதிக்கிணற்றில் அப்படியே தொங்கிக்கொண்டிருந்தது. முன்னே கேள்விகேட்ட அந்த மனிதர் இவைகளைப்பார்த்து அதிசயங்கொண்டு 'இத்தகைய மனைவியிருந்தால் இல்லறம் நல்லது; இல்லாவிட்டால் துறவறமே சிறந்தது' என்று எண்ணிக்கொண்டு போய்விட்டார். இதுபற்றியே வள்ளுவரும்,

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்"

என்றார்.

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டாயின்
எத்தாலுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமா றாக இருப்பளே யாமாயின்
கூறாமற் சந்நியாசங் கொள்."

என்றார் பிறரும்.

பின்னுரை.

சகோதரிகளே! நாகரிகமும் கற்பும் தெய்வபக்தியும் மற்றுமுள்ள நற்குணங்களும் பிறந்த நம் நாட்டிலே கல்வி கற்பு வீரம் சௌரியம் முதலிய அருங்குணங்கள் வாய்ந்த அரிவையர் அளவற்றோ ரிருந்தனர். அவர்களிற் பலர் சரித்திரம் வெளியாகாமல் மறைந்தன. சிலரைப்பற்றிய சரித்திரங்களே அறியக் கிடக்கின்றன. அவற்றையும் முழுதும் ஆராய்ந்து வெளியிடின் மிகப்பெருகும் ஆகலின் அதற்குப்பயந்து சிலருடைய சரித்திரங்களைமட்டும் வெளியிட்டு நிறுத்த நேர்ந்தது.

இதுவரை எழுதிவந்த விஷயங்களில் எவ்வளவு பயன் விளையுமோ ஆண்டவனே அறிவார். பல விடங்களில் பல குடும்பங்களில் பார்த்த அனுபவத்தால் மனம் வருந்தி இவர்கள் இத்தகைய நிலையிலிருந்தால் நம் நாடு விடுதலை யடையவதெப்படி எனத் துக்கித்ததுண்டு; துக்கிப்பதுண்டு. இச் சிறுநூல் எழுத நேர்ந்ததற்கும் இதுவே காரணம்.

ஆரம்பத்தில் இதைக் கண்ணுற்ற கனவான்களிற் பலர் நேரிலும் கடிதங்கள் மூலமாகவும் நல்லபிப்பிராயங் கொடுத்து உற்சாகப்படுத்தியதால் நினைத்ததைவிடச் சற்று அதிகமாக விரிக்க நேர்ந்தது. மேல்நாட்டு நாகரீகம் தலைவிரித்தாடும் இக்காலத்தில் இந்நூல் எவ்வளவு பயன்படுமென்பது விளங்கவில்லை. இந்நூலின் விஷயமாக நல்ல அபிப்பிராயமுடைய நண்பர்கள் தங்கள் கருத்தை இப்பத்திரிகையின் ஆசிரியரவர்கட்குத் தெரிவிப்பார்களாயின், அவரால் இது தனிநூலாக வெளியிடப்படினும் படலாமென்பது எமது துணிபு. அப்படி வெளியிட நேருங்கால் சில சீர்திருத்தங்களோடு இது பிரசுரிக்கப்படும்.

எந்த நோக்கத்தைக்கொண்டு இது எழுதப்பட்டதோ அந்தப்பயனை இச்சிறு நூல் உண்டாக்குமாயின் அதைவிடச் சிறந்தபேறு வேறில்லை. ஆகலின் சகோதரிகள் யாவரும் இதனைத் தொடக்கத்திலிருந்து விடாமல் வாசித்து அதன்படி ஒழுகவும், சகோதரர்கள் இதைத் தங்கள் வீட்டிலுள்ள மாதர்களுக்குக் கொடுத்து வாசிக்கச் செய்யவும் வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். ஆண்டவர் அருள்புரிவாராக. உலகம் பிழை பொறுப்பதாக.

மாதர் நீதி மஞ்சரி முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

குறிப்பு :—இந்த சஞ்சிகையோடு, சித்தூர் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் பூ. ஸ்ரீநிவாசலுநாயுடு அவர்கள் நமது ஆனந்தபோதினியில் வெளியிட்டு வந்த "மாதர் நீதி மஞ்சரி" என்னும் சிறு நூலானது முற்றுப்பெறுகின்றது. இது நமது பெண்மணிகளுக்கு இன்றியமையாதது. ஒவ்வொரு குடும்பத்திலும் இது இருந்துதீரவேண்டியதே. ஓய்வுகாலங்களில் நமது ஸ்திரீ ரத்னங்கள் இதை நிதானமாக வாசித்து, இதிற் கூறியபடி நடந்து பிறந்தகத்திற்கும் புக்ககத்திற்கும் பெருங் கீர்த்தியை நிலைபெறச் செய்யலாம். குடும்பவிவகாரத்தில் மக்கள் முதலிய சகல விஷயங்களையும் கவனிக்கவேண்டிய முறைகளையுந் தெரிந்துகொள்ளலாம். நமது சந்தாநேயர்கள், இது புஸ்தகமாக வருவதை ஆமோதித்தால் அவ்வாறே செய்யப்படும். ப-ர்.

---

## பெற்ருேர்.

பெற்ருேர் என்போர் பிள்ளையை ஈன்ற தாய், தந்தையர் ஆவர். இவர்களில் இயல்பாகவே சேயின்மீது மிக்க அன்புள்ளவள் தாயேயாகும். இரண்டாவது தந்தை. இவ்விருவர் தவிர இவ்வுலகில் வேறு உற்ற உறவினர் இல்லை. பிள்ளை என்ன பிழை செய்யினும் தாய் பொறுப்பள். சரித்திரத்தில் தாய் தன் மகனுக்காக உயிரைவிட்டாள் எனவும் படித்திருக்கிரேம். தாய் ஐயிரு திங்களாக அங்கம் எல்லாம் நொந்து பிள்ளையைப் பெற்று அப்பிள்ளைக்கு இரங்கிப் பால் ஊட்டித் தாலாட்டி நோயுற்றகாலை மருந்தளித்துத் தானும் மருந்துண்டு பின்னர் எக்காலமும் அப்பிள்ளையைத் தன் உயிரைப்போல் பேணி வளர்த்து அக்குழந்தையின் வாழ்வையே கருதியிருப்பாள். தனக்கு உணவில்லாவிட்டாலும் தன் பிள்ளை 'உண்டால் போதும்' என வறிய தாய் கூலிக்குழைத்தாவது பிள்ளைக்குணவூட்டி அதனைப் பேணுவாள்.

தந்தையோ, தன்பிள்ளை பிறந்து வளர்ந்து சுகமடையும் பொருட்டு அப்பிள்ளைக்கு உணவு, உடை தேடிக்கொடுத்துப் பருவகாலத்தில் அதனைப் படிக்கவைத்து அறிவுபெறச் செய்கிருர். இத்தகைய உதவி வேறு எவரும் செய்வாரில்லை. அப்படிச்செய்ய அன்னியர் உரியரும் அல்லர். ஒருகால் அவர்கள் செய்ய நேரிட்டாலும் தாய் தந்தையர்போல் எக்காலமும் ஊறிய அன்புடன் செய்யார்கள். இதை எந்தப்பிள்ளையும் தன் பெற்ருேர் மரித்ததும் அறிந்துகொள்ளலாம். இருக்கிறபொழுது யாரும் அவர்கள் பெருமையை அறிதல் முடியாது. நிழலின் அருமையை வெயிலில் அலைந்தாலொழிய ஒருவன் உணரமாட்டான். இவற்றை எல்லாம் உள்ளவா றுணர்ந்த பெரியோர், பெற்ருேரைப் பலவாறு புகழ்ந்து கூறியுள்ளார். அக்கூற்றுக்கள்:—

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'
'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை'

'தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
மூந்தையோர் கண்ட முறை'

என்பனவாம்.

பிள்ளைகளை இங்ஙனம் இயன்றமட்டும் காப்பாற்றி அவர்கள் எத்தகைய பிழை செய்யினும் பொறுத்து அவர்கள்மீது அருள்சுரந்து, அவர்களை ஆசீர்வதிக்கும் அன்னை தந்தையர்போல் அமைந்த தெய்வம் அவர்கட்கு வேறு எங்கும் இல்லை.

பிள்ளைகளின் வாழ்வில் மகிழ்ந்து, அவ்வாழ்வைத் தம் வாழ்வினும் மேலாக மதித்து அவர்களுடைய தாழ்வில் வருந்தி அவர்களை எப்பொழுதும்விட்டு நீங்காது உடனுறையும் தாய் தந்தையரினும் தகுதியுடைய உறவினர் வேறு எங்கும் கிடையார்.

எல்லோரும் இத்தகைய தாய், தந்தையரைக் கடவுளுக்கு ஒப்பிடுவர்; யான் அவர்களைக் கடவுளினும் மேலானவர்கள் எனக் கூறுவேன். ஏனெனில், கடவுள் நன்மைக்கு இன்பத்தையும், தீமைக்குத் துன்பத்தையும் அருளுகிறார்; பெற்றோர் எப்பொழுதும் தம்மாலான நன்மையையே புரிவர்.

இன்னும் மனிதர்க்குப் பெற்றோரைப்போல் கடவுள் உற்ற உறவினரென்று சைவசமய ஆசிரியர்களும், ஆழ்வார்களும் கூறுகின்றனர். ஆனால், அவர்கள் அங்ஙனம் மனிதர்க்குப் பெற்றோரைப்போல் உறவினராய், அவர்களின் பிழைபொறுத்து அவர்களை ஆட்கொள்ளவேண்டுமென்றால் மனிதர்கள் கடவுளிடத்தே பத்திபண்ணவேண்டும் என்றும் கூறுகிறார்கள். தாய் தந்தையரின் தன்மையோ அப்படிப்பட்டதன்று. பிள்ளைகள் பத்திபண்ணி அவர்களைப் பூஜித்தாலும்சரி; இகழ்ந்து பழித்தாலும்சரி; அவர்கள் தம் மக்கள்மீதுள்ள அன்பை மறக்கமாட்டார்கள். இதுபற்றியே 'காதற்ற ஊசியும் வாராதுகாண்நுங் கடைவழிக்கே' எனக் கூறி முற்றத்துறந்த மூதறிவாளராகிய பட்டினத்தடிகளும் தம் தாய் மாண்டதும் பரிவாக அவர்மீது பல பாக்கள் பாடியுள்ளார். அவரே அங்ஙனம் பரிந்தார் என்றால் இப்பெற்றோர்களின் உயர்வு இப்பெற்றியது என்பதைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ?

ஆதலின், ஒவ்வொருவரும் தாய் தந்தையர்மீது மிக்க அன்புடையவர்களா யிருக்கவேண்டும்; நன்றியறிதலைக் காட்டவேண்டும். அன்னிய நாட்டாசாரங்களைக் கற்றுச் சிலர் பெற்றோரை அவமதிப்பதுபோல் அவமதித்தல் கூடாது. அவர்களைத் தெய்வங்களைப்போல் நினைத்துக் கொண்டாடுவோர் இம்மை மறுமை இரண்டிடத்தும் இன்புறுவர்.

இங்ஙனம், அன்பன் ஆதிநாதன்,

ஸ்ரீயது குலசங்கம், இடைத்தெரு, பாலக்கரை, திருச்சினப்பள்ளி.

## நாலடியார் வசனம்.

(153-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 27-ம் அதிகாரம்—நன்றியில் செல்வம்.

**(சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படாத செல்வம்.)**

சமீபத்திலிருப்பதாய் மிகுதியாகப் பழுத்திருந்தாலும் பொருக்குள்ள அடிப்பாகத்தையுடைய விளாமரத்தை வௌவால்கள் சேரமாட்டா. (அது போல) மிகவும் சமீபத்திலுள்ளவர்களானாலும் (பிறர்க்கு உதவிசெய்யும் படியான) பெருமைபொருந்திய குணம் இல்லாதவர்களுடைய செல்வமானது (எளியவர்களால்) தமக்குக் கிடைக்குமென்று நினைக்கத்தக்க முறைமையை யுடையதன்று. (எளியவர்க்குப் பயன்படாது.) (1)

(கள்ளிப்பூவானது கைகளால்) அள்ளி எடுத்துக்கொள்ளத்தக்கவை போன்ற (அழகுநிறைந்த) சிறிய அரும்புகளை யுடையவைகளாயினும் அணிந்துகொள்ளத் தகுந்த பூவல்லாமையால் (அவற்றைப்பறிக்க) அக் கள்ளிச்செடியின்மேல் (ஒருவரும்) கைநீட்டார். (அதுபோல) செல்வத்தை மிகுதியாகப் பெற்றுள்ளவராயினும் கீழ்மக்களை அறிவுடையோர் ஒருவரும் விரும்பிச் சேரார். (2

மிகுந்த அலைகளையுடைய சமுத்திரத்தின் கரையிலிருந்தாலும் வலிமையான நீர் ஊறும் உப்பில்லாத கிணற்றினிடம்சென்று (அதன் நீரையே) உண்பார்கள். (கடல் நீர் சமீபத்திலிருந்தாலும் அதைவிட்டு தூரத்திற் சென்றாயினும் கிணற்று நீரையே குடிப்பார்கள்). (அதுபோல) சமீபத்தி லுள்ளவர் மிக்க செல்வமுள்ளவரா யிருப்பினும் (அவர்களை விரும்பாமல்) வெகு தூரத்திற்போயாயினும் பயன்படுகிறவர்களாகிய கொடையாளிகளிடத்திலேயே பெரியோர்க்கு விருப்பமுண்டாகும். (3)

அறிவுள்ளவர்கள் வறியராயிருக்க, பனைவட்டும் வழுதுணைக்காயும் போன்ற அறிவில்லாதவர்கள் பட்டாடைகளையும் நல்ல வஸ்திரங்களையும் தரித்து (செல்வர்களாக) வாழ்வார்கள். (ஆதலால்) பொருந்திய கடல் சூழ்ந்த உலகத்தில் புண்ணியமாவது வேறுபட்டிருக்கும். (அவ்வாறிருப்பது பூர்வபுண்ணியப் பயனும் என்பது கருத்து. (4)

வேல்போன்ற நீண்ட கண்களையுடையவளே! நல்லவர்களும் நீதியுள்ளவர்களும் தரித்திரராயிருக்க, நற்குணமில்லாத கல்லாதவர்களுக்கு செல்வமுண்டாயிருக்கும் காரணம் (யாதெனில்) பூர்வபுண்ணியப் பயனேயல்லாமல் ஆலோசிக்குமிடத்து வேறொரு காரணமும் காணப்படவில்லை. (5)

வாசனையில்லாத (பூவின்) புறவிதழ்போன்ற, நல்ல தாமரைமலர்மேலிருக்கும் பொற்பதுமைபோன்ற இலக்குமியே! (நீ) பொன்போன்ற நல்ல மனிதர்களிடத்தில் (சேர்ந்திருப்பதை) விட்டு, வேறுபட்ட குணத்தை யுடைய அற்ப மனிதர்களிடத்தில் சேர்ந்திருப்பாய். (ஆதலால்) நீ இவ்வுலகத்தில் சாம்பலாய் (வெந்து) அழியக்கடவாய். (6)

வேல்போன்ற கண்களையுடையவளே! உபகாரிகளிடத்தில் இருக்கும் தரித்திரத்திற்கு வெட்கமில்லையா? (ஒருவர்க்குங்) கொடாத லோபிகளிடத்தில் நீங்காமல் பரவுவதற்குச் செல்வம் (ஏற்ற) பிசிறே? இவ்விரண்டும் அவ்வவ்விடத்திலே நன்மையடையாமல் நிற்கும் நிலையை நீ வியந்து பார். (வறுமையும் செல்வமும் எவ்வெவ்விடத்தி லிருக்கவேண்டுமென்னும் தாரதரந் தெரியாமல் நின்று துன்பமடைகின்றன. (7)

வல்லமை யில்லாதவர்கள் தூரதேசங்களுக்குச்சென்று (யாசகத்தால் கிடைக்கும்) பலவகைக் கலப்பான போசனங்களையுண்டு காலங்கழிப்பார்கள். வல்லமையுள்ளவர்கள் செல்வமுடைமையால் (அவ்வாறு) தூரதேசங்களுக்குப் போகாமல் சரீரம்வியர்க்க கஷ்டப்பட்டு இருக்குமிடத்திலிருந்தே பொரிக்கறியுடன் போசனத்தை உண்பார்கள். (8)

மின்னல் விளங்கும்படியான மேகமானது (வயல்களில்) பொன்னிறமுள்ள செந்நெற் பயிர் கதிர்களோடு கருவும் வாடிக்கிடக்க (அங்கே மழையைச் சொரியாமல்) சமுத்திரத்தில் நீரைப்பொழியும். (அதுபோல) அறிவில்லாதவர்கள் மேன்மையான ஐசுவரியத்தைப் பெற்றால் அவர்களுடைய செல்வமும் அப்படிப்பட்ட தன்மையையே யுடையதாகும். (தரித்திரத்தால் வாடும் நற்குணமுள்ள பெரியோர்க்குக்கொடாமல் துன்மார்க்கர்க்குக் கொடுத்துதவுவர்). (9)

பகுத்தறிவில்லாதவர்கள் பல நூல்களைப் படித்திருந்தாலும் (அவர்கள்) படியாதவர்களே யாவர்; அறிவுடையோர் படியாதிருந்தாலும் படித்தவராவர். (பிறரிடம் சென்று) யாசியாதவர் (மனம்) பரிசுத்தமுடையதாயிருக்க (அவர்கள்) தரித்திரர்களா யிருந்தாலும் செல்வமுடையவர்களே; (செல்வவான்களாயிருந்தாலும்) (வறியோர்க்குக்) கொடாதவர்களாயின் (அத்தகையோர்) தரித்திரர்களேயாவர். (10)

## 28-ம் அதிகாரம் ஈயாமை.

### (கொடாமலிருக்குந்தன்மை.)

சமையல் செய்து சாப்பிட்டு வாழ்தலாயது சிநேகர்க்கும் சிநேகங் கொள்ளாதவர்க்கும் தமக்குள்ள அளவால் சமைத்த உணவைப் பங்கிட்டுக் கொடுத்து உண்ணுதலாம். (அவ்வாறு செய்யாமல்) சமைத்ததைக் கதவைச்சாத்தித் தாளிட்டுக்கொண்டு தாம் உள்ளேயிருந்து சாப்பிட்டு ஒழுகும் பயனில்லாத மனிதர்களுக்கு மேலுலகத்தின் கதவு மூடப்பட்டிருக்கும். (10-ம் அதிகாரத்திலுள்ள முதல்பாட்டின் பொருளை இங்கு ஒப்பு நோக்குக.) (1)

எவ்வளவானாலும் தம்மால் கூடியவளவு சிறிய தருமங்களையாயினும் செய்தவர்களே சிறப்படைவார்கள். (அவ்வாறின்றி) மிகுந்த செல்வம் கிடைத்தபொழுது பிறகு பார்த்துக்கொள்வோம் என்று சொல்வோர் உலகநிந்தையாகிய கடலில் விழுந்து வருந்துவார்கள். (2)

(தானும்) அனுபவித்துக் கழியாமலும் துறவிகளுக்குச் சிறிதும் கொடாமலும் பொருளைச் சேர்த்துவைத்து இறந்துபோகும் அறிவில்லாத லோபியை அவன் தேடிவைத்த (அந்தப்) பொருளும் அவனைப் பார்த்துச் சிரிக்கும், உலகத்திலுள்ள அருளும் அவனைப்பார்த்து நகைக்கும். (3)

(பிறர்க்குக்) கொடுத்தலும் (தான்) அனுபவித்தலும் அறியாத லோபகுணம் பொருந்திய மனமுடையவன் பெற்ற செல்வமானது (ஒருவனது) குடியிற் பிறந்த வடிவழகுள்ள பெண்ணைப் (அன்னியன் அனுபவிப்பது) போல, அனுபவிப்பதற் குரிய காலம் வரும்போது அயலானல் அனுபவிக்கப்படும். (4)

அலைகளை வீசுகின்ற நீரையுடைய பெரிய சமுத்திரத்தைச் சேர்ந்திருந்தாலும், குறைந்து குறைந்து சுரக்கும் நீரையுடைய கிணற்றின் நீரூற்றை (த்தேடிக்) கண்டு (அதையே) உண்பார்கள். (அதுபோல) மறுமைப்பயனாகிய தருமத்தையறிந்து செய்யாதவர்களுடைய செல்வத்தைவிடப் பெரியோர்களுடைய மிக்க தரித்திரமே மேலானது. (5)

அறிவில்லாத லோபியானவன் (தான் தேடிய பொருளைப்பார்த்து இது) என்னுடையது என்னுடையது என்று நினைந்திருப்பான். நானும் பயன்படாத அப்பொருளை என்னுடையது என்னுடையது என்று எண்ணியிருப்பேன். (அப்பொருள்) அவனுடையதாயிருந்தால் ஏன் அவன் தானும் அதை (பிறர்க்குக்) கொடாமலும் அதனுல் வரும் பயனை அனுபவியாமலும் இருக்கவேண்டும்? நானும் அப்படியே பிறர்க்குக் கொடுப்பதுமில்லை; அனுபவிப்பதுமில்லை. (ஆகையால் 'அது என்னுடையதேயென்று கூறுவதில் குற்றமென்ன' என்று பணப்பெட்டி கூறுவதாகச் சொல்லப்பட்டது இது.) (6)

தருமம் செய்யாத லோபகுணமுள்ள செல்வரைவிட தரித்திரர் (பலவகைத்) துன்பங்களினின்றும் தப்பினவராவர். எவ்வாறெனின் (செல்வத்தின் பயனை அடைதலில்லாமையால் இவர் பொருளை யிழந்தவரேயாவர் என்று சொல்லப்படும் பழிச்சொற்களினின்றும் தப்பினுர்கள். வருத்தப்பட்டு அப்பொருளைக் காப்பாற்றும் கஷ்டத்தினின்றும் தப்பினுர்கள். தம் கைநோக இறுகப் பிடிக்கும் சிரமத்தினின்றும் தப்பினுர்கள். (இவ்வாறு இவர்கள்) தப்பினவை பல (உண்டு). (7)

(ஒருவன், செல்வம்) தன்னுடையதாக (இருக்கும்பொழுது) தான் (அப்பொருளைப் பிறர்க்குக்) கொடான். (அவனுடைய பங்காளிகளும் (அப்பொருள்) தம்முடையதானகாலத்தில் (பிறர்க்குக்) கொடுக்கமாட்டார்கள். (அது) முன் தன்னுடையதாக இருந்தபொழுது தான் கொடுத்தால் அதை அப்பங்காளிகள் (வேண்டாமென்று)தடுக்கமாட்டார்கள். தானிறந்தபின் அவர்கள் கொடுத்தால் தானும் கோபிக்கமாட்டான். (இவ்வாறு பொருளைச் சம்பாதித்தவர்களும், அவர்களுக்குப் பிறகு அதையடைந்தவர்களும் லோபிகளாகவே யிருக்கும் குடும்பங்களும் உண்டு என்கிறபடி). (8)

யாசிப்பவர் கன்றாகவும் கொடுப்போர் பசுவாகவும் சந்தோஷத்தோடு விரைந்து கொடுப்பதே கொடையாம். (பசுவானது கன்றைக்கண்டவுடன் விரைந்து சென்று பால் தருவதுபோலக் கொடுப்பதே சிறந்ததருமமாகும்.) லோபகுணமுள்ள கீழ்மகன் (அவ்வாறின்றி) பலமுடையவர்கள் அழுத்தி வருத்த மெதுவாகப் பால் தருகிற பசுவைப்போல அடித்தல் உதைத்தலாகிய பல உபாயங்களைச செய்து வருத்தினால் கொடுப்பன். "பல்லுதிரத் தாடையினில் போடுவார்க் கீவார் பொருள்"; "இரணங்கொடுத்தாலிடுவர் இடாரே சரணங் கொடுத்தாலுந் தாம்" என்றார் பிறரும். (9)

பொருளைச் சம்பாதித்தலும் துன்பம்; (சம்பாதித்த) அப்பொருளைக் காப்பாற்றலும் துன்பம்; காக்கப்பட்ட (அப்பொருள்) குறைவுபட்டால் துன்பம்; அழிந்துவிட்டால் துன்பம்; (ஆகையால்) பொருளானது துன்பத்திற்கெல்லாம் இருப்பிடமாம். (இன்னல் தரும் பொருளை ஈட்டுதலுந் துன்பமே—பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன—தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்—இழத்தலுந் துன்பமேயாம்) என்னும் செய்யுளின் கருத்தையும் இதனோடு ஒப்பிடுக. (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## சிறுவர்களுக்கு அம்மைப்பால் குத்துவது ஓர் தகுந்த வைத்தியமுறையா?

பாலர்களுக்கு அம்மைப்பால் குத்தும் வழக்கத்தைப்பற்றி இங்கிலாந்திலே பலர் ஆராய்ச்சி செய்துபார்த்து அம்மை குத்துவதற்கு விரோத சங்கம் என்று ஒருசங்கம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் கூறும் ஆட்சேபனைகளாவன:—(1) பசுக்கள் கன்றுகள் ஆகியவைகளின் மடியிலிருந்து அம்மைப்பால் உற்பத்தியாவதால் ஆயிரக்கணக்கான நிரபராதியான பிராணிகளுக்குச் சொல்லொணாத் துன்பம் உண்டாகிறது. அம்மை குத்துவதனால் ஏதேனும் நன்மை யிருந்தபோதிலும் இந்தக் கொடுமை செய்யக் கூடாத காரியம். (2) ஆனால் அம்மைகுத்தும் வழக்கமானது நன்மை செய்கிறதற்குப் பதிலாகப் பல புது வியாதிகளை உண்டாக்குகின்றதென்பதை (இதனுடைய பக்தர்கள்) அதாவது அம்மைகுத்திக் கொள்ளவேண்டுமென்பதை ஆமோதித்து அம்மை குத்திக்கொண்டவர்கள் தாமுங்கூட மறுக்கமுடியாது. (3) அம்மை பூட்டியுள்ள ஒருவனுடைய இரத்தத்தைக் கொண்டு உற்பத்தி செய்யும் அம்மைப்பாலானது பிறர்பாற் செலுத்தப்படுமிடத்து அவனுக்கு இருக்கக்கூடிய பல வியாதிகளையும் அவரிடம் உண்டு பண்ணக்கூடும். (4) அம்மைப்பால் குத்திக்கொண்டவர்களுக்கு அம்மை வராதென்ற நிச்சயமில்லை. அம்மை குத்துவதை முதன் முதல் இங்கிலாந்திலே பரவச்செய்தவராகிய டாக்டர் ஜென்னர் என்பவர் ஒரு கையில் ஒரு குத்துக் குத்திக்கொண்டவர்களுக்கு ஆயுள் முடியும்வரையும் அம்மை வரா

தென்று ஆரம்பத்திற் சொன்னார். பின்னர் அது பிரயோசனப்படவில்லை என்று தெரிந்தும் இரண்டு கைகளிலும் குத்திக்கொண்டால் சரியான பலன் உண்டாகுமென்று சொல்லப்பட்டது. அதுவும் பிரயோசனப் படாமற் போகவே இரண்டு கைகளிலும் ஒரு குத்துக் கதிகமாகக் குத்திக் கொள்ளவேண்டு மென்றும் சொல்லிக்கொண்டிருந்தனர். பின் எழு வருஷத்துக் கொருமுறை குத்திக்கொள்ள வேண்டுமென்றும், இப் பொழுது மூன்றுவருடத்திற் கொருமுறை குத்திக்கொள்ள வேண்டுமென் றுங் கூறுகின்றார்கள். இப்படியெல்லாம் அபிப்பிராயபேதம் இருப்பதி லிருந்து டாக்டர்களுக்கே இவ்விஷயத்தில் போதிய நம்பிக்கை இல்லை யென்று தெரிகிறது. உண்மை என்னவென்றால், அம்மை குத்திக்கொண் டவர்களுக்கு அம்மை வராதென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. (5) அம்மைப்பால் ஒரு ஆபாசமான வஸ்து. ஒரு ஆபாசத்தை இன்னொரு ஆபாசத்தால் எடுத்துவிடலாமென்பது மதியீனம்.

இம்மாதிரியாகச் சொல்லி அம்மை குத்திக்கொள்வது கூடாதென்று அநேக ஜனங்கள் நினைக்கும்படி இந்தச்சங்கஞ் செய்துவிட்டது. இதற்கு உதாரணமாக ஒரு பட்டினத்தில் பெரும்பாலான ஜனங்கள் அம்மைப்பால் குத்த மறுத்துவிட்டார்கள். அவர்கள் ஒருவிதமான வியாதியும் இல்லாத வர்களா யிருக்கிறார்கள் என்று வைத்தியமதிப்புக் கணக்குகளிலிருந்து தெரிகிறது. ஆனபடியால் இச்சீவகாருண்ணியமற்ற முறையைத் தொலைத் துச் சனங்களுக்குச் சீவமோசம் வராமல் காப்பது டாக்டர்களுடைய பெருங் கடமையாகும்.

சில நோயாளருக்கு மருந்துகளும் நீர் ஆகாரங்களும் தோலின்வழி யாய் இரத்தத்திற்குள் செலுத்தப்படுகின்றன வென்பது அநேகர் அறிந்த விஷயம். அம் மருந்துகளையும் ஆகாரங்களையும் வாயின்வழியாகச் சாப்பிட் டால் அவை இரத்தத்துடன் எவ்வளவு நேரத்தில் ஐக்கியப்படுமோ அதை விடக் குறைந்த நேரத்தில் ஐக்கியப்பட்டு விடுகின்றனவென்பது அறிந் தோர் தெரிந்த விஷயம்.

அம்மைப்பால் என்னும் வஸ்துவைக் கண்ணாற் கண்டவன் வாந்தி செய்வான். கையிற் பட்டால் கை கழுவவேண்டியிருக்கிறது. இப்படிப் பட்ட கெட்ட வஸ்துவைப் பாலர்களின் சரீரத்திற் செலுத்துவதால் வருங் கேடுகள் டாக்டர்களுக்கே தெரியும். தெரிந்தோ தெரியாமலோ உலகத் தவர்களுக்குத் தீமைசெய்து விடுகிறார்களென்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்குகின்றது. எங்கள் அரசினர் இதைப்பற்றிச் சிரத்தை கொள்ளாதிருப்பது பெரும் அநீதியாகும். அம்மைப்பால் குத்தினதின் நிமித்தம் எத்தனையோ பிள்ளைகள் இறந்துபோயின. இது மிகப் பூர்வீக மான வழக்கமல்ல வென்றும் 1798-ம் வருஷத்திற்றான் இந்த வழக்கம் ஏற்பட்டதென்றும் மகாத்மா காந்தி எழுதுகிறார். ஆனால் இப்போதுள்ள

கிராம அதிகாரிமார் கடுமையான சட்டங்கள் செய்தும் கடுமையான தண்டனைகள் விதித்தும் இந்த நிஷ்டூர வழக்கத்தைச் செய்துவருகிறார்கள். இதனால் பாலர்படும் வேதனையோ நாவால் எடுத்துரைக்க வலாது. ஆகையால் அரசினர் இனிமேலாவது கண்விழித்து இப்பெருங் குறையைத் தீர்ப்பார்களென நம்புகிறேன். "ஓர் தாய்".

(இ. சாதனம்.)

---

## வருங்கால நிகழ்ச்சிக் குறிப்பு.

1. 1926-ம் வருடம் பிப்ரவரிமீ 11உ முதல் 1927-ம் வருடம் ஆகஸ்டுமீ 10உ வரை இந்தியாவின் வடபாகத்தில் அரசர்களுக்குள் ஒரு மஹா யுத்தம் ஆரம்பமாகும். கொடிய மஹாயுத்தம் நடக்கப்போவதால் உத்தமமத்திப எல்லா ஜனங்களுக்குங் கொடுந்துன்பம் ஏற்படும். பின்பு சமாதானமாகும்.

2. 1927-ம் வருடம் செப்டம்பர்மீ 15உ முதல் 1930-ம் வருடம் மேமீ 26உ வரை இந்தியாவிலிருந்து இலங்கை வரையும் மழைக் குறைவு உண்டாகும். அன்றியும் மலைநாட்டுப் பிரதேசங்களிலும் மழை வளம் குன்றிவிடுவதால் பூமியில் கொடிய பஞ்சம்பரவும். பூமியில் வேளாண்மை யற்பமாகும்; விஷபேதி, விஷசுரம், வைசூரி முதலிய தொத்துவியாதிகள் பரவி எண்ணிக்கையற்ற ஜனங்கள் எமன்றிசை ஏகுவர். உலகமெங்கும் பசி நோய் அதிகப்படும். கொள்ளை களவு கலகம் இவை தோன்றி;மேதாவியர்முதல் கயவர்வரை போர்க்களத்தில் இரத்தமயமான யுத்தஞ்செய்வார்கள். அதனால் அளவிடப்படாத ஜனங்கள் மரணமடைவர். ஆகையால் கொடிய பஞ்சகாலம் வரப்போகிறது என்றறிந்து மூன்று வருடத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களை சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டுமென்று காருண்யம் நிறைந்த கனவான்களைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன் என்று திருநெல்வேலி ஜில்லா, இளையரசனேந்தல், தெற்கு ரதவீதி, தீர்க்கதரிசி நிலையம் ஆபீஸ்,

வானசாஸ்திரி, M. K. V. சுப்புசாமி நாயுடு எழுதுகிறர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

(195-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஸ்மிருதிகள்.

நாம் நித்தியவிதி தொடங்கி யிதுகாறும் எழுதிவந்தவைகளெல்லாம் ஸ்மிருதிகளிற் கூறப்பட்டவைகளே யாம். புராண இதிகாச ஆகமங்களிலிருந்தும சில கூறப்பட்டன. ஆயினும் முக்கியமாய் ஸ்மிருதிகளே ஆதாரம். ஆதலால் ஸ்மிருதி என்பது யாது? அது எவ்வாறுண்டாயிற்று? என்பனவாதி சங்கைகளுண்டாம். அதுபற்றிச் சிறிது கூறிப் பின் வேறு விசேஷங்களை விரிப்பாம்.

அநாதிநித்திய சுவயம்புவாகிய வேதம் ஒருபோதும் அழிவதில்லை, அது நித்தியமாயுள்ளது. கல்பாந்தங்களில் பிரம்மத்தில் ஒடுங்கிக் கல்பாரம்பத்தில் தோன்றும். மஹா கல்பாரம்பத்தில் பரமசிவன் பிரமதேவருக்கு வேதத்தைச் சொன்னார். அவர் அதைச் சிந்தித்துக்கொண்டிருந்தார். அவரது தியானத்தில் அவருக்குப் புலப்பட்ட தர்மகர்மங்களே ஆதிஸ்மிருதியாம். ஸ்மிருதி என்றால் சிந்திக்கப்பட்டது என்றர்த்தம் தரும். அவருக்கடுத்தவர் மனு. இவரே ஸ்வாயம்புவமனு என்று பிரசித்திபெற்றவர். இவர் பிரமதேவரிடமிருந்து வேதாதிகளைப் பெற்றுக்கொண்டு தவம் செய்தார். அவருக்கு வேதவிதிகளின் அர்த்தம் தியானத்தினால் விளங்கியது. அதைக்கொண்டு அவர் ஒருநூல் இயற்றினார். அதுவே மனுஸ்மிருதி என்று புகழப்படுவது. இவரே ஆதிஸ்மிருதிகர்த்தர் எனப்படுவர். ஏனெனில் இவரே ஆதியிற் பிறந்தவர். இவருக்குப்பின்னரே மற்றவர் தோன்றினார்கள். இவ்வாறு தபோபல மகிமையால் வேதவிதிகளை யறிந்து தர்மங்களைக் கூறினவர் பதினெண்மர் என்பர்.

அவர்-மனு, அத்திரி, விஷ்ணு, ஹாரீதர், யாக்ஞவல்கியர், உசனர், அங்கிரஸ், யமன், ஆபஸ்தம்பர், ஸம்வர்த்தர், காத்தியாயனர், பிரகஸ்பதி, பராசரர், வியாசர், சங்கர், லிகிதர், தட்சர், கௌதமர், சாதாதபர், வசிஷ்டர் என்பவர்களாம். மனுவே மற்ற ஸ்மிருதிகர்த்தர்களுக்கு ஆதலால் அவரையும், ஸ்மிருதி கர்த்தர்களைக் கணக்கிட்ட யாக்ஞவல்கியரையும் வேறாக எடுத்துக்கொண்டால் ஸ்மிருதிகர்த்தர்கள் பதினெண்மர் என்று கணக்கிடப்படும். ஆயினும் யாக்ஞவல்கியர், சங்கர் இவ்விருவரும் கூறியபடி ஸ்மிருதிகர்த்தர்கள் இருபத்தொரு பேர்களாம். யாங் கூறியவாறு பதினெண்மர் என்றே கூறுவது வழக்கம். சங்கர் கூறியதிலும் மற்றவர்கள் கூறியவைகளிலும் இருபத்தொருவரே காணப்படுகிறார்கள். ஆகையால் ஸ்மிருதிகர்த்தர்கள் இருபத்தொருவர் என்பதே பொருத்தமாம். இவைகளே மூலஸ்மிருதிகளெனப்படும். இவ்வாசிரியர்களும் மூலஸ்மிருதி கர்த்தர்கள் என்று கூறப்படுவார்கள். இவைகள் சப்பிரமாண நூல்களாம். இவற்றுக்கு மாறுபட்டவைகள் அப்பிரமாணங்களாம்.

இவற்றுக்கு உபஸ்மிருதிகளும் உண்டு. அவைகளை இயற்றினவர்கள். ஜாபாலி, நாசிகேதர், ஸ்கந்தர், லோகாக்ஷி, காசியபர், வியாசர் சனற்குமாரர், சந்தனு, ஜனகர், வியாக்கிரர், காத்தியாயனர், ஜாதுகரணி, கபிஞ்சலர், போதாயனர், காணாதர், விசுவாமித்திரர், பைடீனஸி, கோபிலர் என்ப. இப்பதினெண்மர்களும் உபஸ்மிருதிகளை யியற்றிய ஸ்மிருதிக் கர்த்தர்கள் என்று அங்கிரஸ்முனிவர் கூறினார். இந்த உபஸ்மிருதிகளில் மூலஸ்மிருதிகளுடன் மாறுபடாமலிருக்கும் வாக்கியங்களே பிரமாணங்களாகக் கொள்ளப்படும். மாறுபாடுளதாயின் அவ்வாக்கியம் பிரமாணமாவதில்லை. அப்படியே மூலஸ்மிருதிகளும் மனுஸ்மிருதி வசனங்களுடன் மாறுபடாமலிருப்பவைகளே சப்பிரமாணங்களாம். மனுஸ்மிருதிக்கு மாறுபடுவது எதுவானு

லும். அது பிரமாணமாவதில்லை. மனுஸ்மிருதி சிறப்புடையது. மற்றை யவை அதை அனுசரித்தே பிரமாணங்களாம். இவை வேதங்களிற் கூறப் படும் விதிவாக்கியங்களின் இரகசிய அர்த்தங்களை வெளிப்படுத்தவே யெழுந்தனவாம். அப்பொருள்களே மோட்சாருகமான கர்மங்களாம். அக்கர்மங்கள் விதி எனவும் விலக்கு எனவும் இருவகைப்படும். விதித்த கர்மங்களைச் செய்தே தீரவேண்டும். விலக்கியவற்றைச் செய்யாமல் ஒழிக்க வேண்டும். இந்த ஸ்மிருதிகள் சற்கருமங்க ளிவை என்றும், அவற்றைச் செய்வதனுல் இன்ன பலன்களுண்டாகும் என்றும் விரித்துக் கூறும். விதித்தகர்மங்களைச் செய்யும் முறைமை கூறப்படவில்லை. அதற்கென்றே கற்பசூத்திரங்கள் பதினெட்டுந் தோன்றின. அதுமுன்னரே கூறப்பட்டது. இக்கருமங்களைச் செய்வதனுலாகும் பயன்களைப் பிரமாணத்துடன் சிறிது கூறுவாம்.

"இந்தத் தருமசாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டு அது கூறிய விரதங் களை யனுஷ்டிப்பவன் மனோவாக்குக் காயங்களால் உண்டாகும் பாவங் களை யடையமாட்டான்" என்று மனு கூறினுர். அவன் பிரமலோகத்தை அடைவான் என்றும் சொன்னுர். ஆகையால் வித்துவானுகிய அந்தணன் இந்தச் சாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டு அதன்பொருள்களைத் தன் சீடர் களுக்கும் நன்ருய்ப் போதிக்கவேண்டு மென்ருர். தருமசாஸ்திரத்தைப் பயின்ற துவிஜன் தனக்கு முன்னேழு பின்னேழு தலைமுறைகளைப் பரி சுத்தமாக்குகிருன். வியாதிகளுக்கு மருந்து எப்படிப் பயன்தருமோ அப் படியே ஸ்மிருதிகளும் விதிதவறினவர்களுக்கும், புலன்களும் அந்தக்கர ணங்களும் நிலைதப்பினவர்களுக்கும் பெரும் பயனை யளிக்கும். சுருதியும் ஸ்மிருதிகளும் துவிஜர்களுக்கு இரண்டு கண்களாகச் சொல்லப்படுகின் றன. அவ்விரண்டு மில்லாதவர்கள் வழி அறிந்து நடவாமல், தப்புவழியிற் சென்று வருந்துவார்கள். அவர்கள் பதிதர் என்று இகழப்படுவார்கள்" என்ருர் மனு. சுவர்க்கத்தை யடைய விரும்புகிறவனுக்கு வேதாத்தியாய னத்தைப்போலவே ஸ்மிருதியுமாம் என்று ஹாரீதர் கூறினுர். ராகதுவே ஷங்களென்கிற நெருப்பினுற் சுடப்பட்டவர்களுக்கும் அஞ்ஞானவிஷ முண்டவர்களுக்கும், வியாதிகளுக்கு மருந்துகளைப்போலவே தர்ம சாஸ்திரமும் சிகிச்சை கூறுகின்றன என்று சங்கலிகிதர் சொன்னுர். வெளிச்ச மில்லாதபோது பொருள்களொன்றும் புலப்படாததுபோல ஸ்மிருதி யில்லாவிட்டால் தர்மஞானமும் உண்டாவதில்லை என்று ஸ்மிருதி ரத்னவளியிற் கூறப்பட்டது. புராணம், தர்க்கம், மீமாம்சை, தர்ம சாஸ்திரங்கள், ஆறங்கங்கள், நாலுவேதங்கள் ஆகிய இவை பதினன் கும் ஞானஏதுவாகிய வித்தியாஸ்தானங்களாம். துவிஜர்களுக்கு இந்தப் பதினன்கும் அவசியமான வளவைகள் என்று யாக்ஞவல்கியர் கூறினுர். ஆதியில் மனுவா லியற்றப்பட்ட சர்வோத்தமமான தர்மசாஸ்திரத்துக்கு விரோதமான எதுவானுலும் அது பிரமாணமாகாது. அது நன்மையையும்

செய்யாது. வேதத்திலிருந்து எடுத்துச் சொன்னதனால் மனுதர்மம் சர்வ ஸிலாக்கியமுடையது. ஆதலால் மனுஸ்மிருதிக்கு விரோதமான வசனங்கள் அங்கீகரிக்கப்படமாட்டா. வியாதிகளுக்கு மருந்துபோலப் பவப்பிணிக்கு மனுஸ்மிருதிமருந்து என்று வேதம் கூறியது. உத்தமனான துவிஜன் மனுஸ்மிருதியாதி சாஸ்திரங்களையும் வேதோக்தமான நியமங்களையும்வேதவேதாங்கங்களையும் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். வேதமும் ஸ்மிருதியும் மக்களுக்கு இருகண்கள்போல்வன. இவற்றுள் ஒன்றை அறியாதவன் ஒருகண் குருடன். இரண்டும் அறியாதவன் முழுக்குருடன் என்று வியாசரும் ஹாரீதரும் சொன்னார்கள். மனுநூல், அங்கங்களுடன் கூடின வேதம், புராணம், சிகிச்சாசாஸ்திரம் இந்நான்கும் ஈசுவராக்ஞையினால் நிலைபெற்றன வாதலால் இவற்றை எக்காலத்திலும் விடக்கூடாது என்று விஷ்ணுபுராணம் கூறியது. வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளாமையும், ரிஷிகள் வசனத்தை யிகழ்தலும் கட்டுப்பாடில்லாமலிருப்பதுமாகிய மூன்றும் கேடு விளைப்பனவாம் என்று வசிஷ்டர் சொன்னார். ஸ்மிருதிகளுக்கு இவ்வளவு மகிமை எப்படியுண்டாயிற்று என்றால் அதற்கு மனு கூறுவது:—

ரிஷீசுவரர்கள் வேதத்தைப் பிரத்தியட்சமாக அறிந்து ஸ்மிருதியை எழுதினார்கள். ஆதலால் அவையிரண்டும் சப்பிரமாணங்களாம். தர்க்கயுக்திகளைக்கொண்டு அவற்றை நிந்திப்பவன் நாஸ்திகனேயாவான். சாதுக்கள் அவனை விலக்கிவிடவேண்டும். வேதங்கள், ஸ்மிருதிகள், பெரியோர் வசனம் ஆகிய இவற்றைப் பிரமாணமாகக்கொள்ளாதவன் தருமங்கெட்டவன். அவனுக்குத் தன் ஆத்மாவே பிரமாணமாகாது என்றார் ஹாரீதர். தேவலர்-மனுமுதலியோர் தருமசாஸ்திரங்களை இயற்றினர்; கல்பசூத்திரக்காரர் அக்கருமங்களின் முறையை மந்திரப்பிரயோகங்களுடன் இயற்றினர் என்றார். ஆதலால் இவையிரண்டும் ஒன்றை யொன்றுபற்றி நிற்பனவாம். இவை யின்றியமையாதவையாம். இவையெல்லாம் ரிஷிகளாலும் மஹாத்மாக்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டவைகளாம். இதனால் தரும சாஸ்திரங்கள் மனிதர்களுக்கு இன்றியமையாதவை என்று உணர்ந்துகொள்ளலாம். இதிகாசங்களாலும் புராணங்களாலும், வேதங்களாலும், பெரியோர்களாகிய ரிஷிகளாலும் புகழ்ந்து பாராட்டி அனுஷ்டிக்கப்பட்ட தர்மசாஸ்திரவிதிகளை அறிந்தோரால் கேட்டுத் தெரிந்துகொண்டு அதன்படி நடந்து நற்கதி அடைய விரும்புவதே மனிதராகிய நமக்குப் பெருமையாம். (தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## கடவுள்.

'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமா' யுள்ளவரும், ஆதிமத்தியாந்தரஹிதரும், ஸர்வவல்லமையுள்ளவருமான பரமாத்மாவை நமது தமிழ் நாட்டின்கண் 'கடவுள்' எனச் செப்புவது வழக்கம்.

தயாநிதியான பரமேசுவரனுக்கு 'கடவுள்' என்னும் திருநாமம் ஏன் வழங்கவேண்டும்? இதற்கு அதிரகஸ்யமான ஏதோவொரு காரணார்த்த மிருக்கவேண்டுமெல்லவா; ஆகையால் ஈண்டு அதைப்பற்றிச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்:

'கடவுள்' என்பதைப் பிரித்தால் கட+உள் என இரண்டு பதமாகிறது. இதற்கு கடம்=தேகம், உள்=தேகி அதாவது—தேகத்திற்குள்ளிருக்கும் ஆத்மா என அர்த்தமாகிறது.

கடம் (சரீரம்) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என மூன்றுவகைப்படும். ஜாக்ரா (விழிப்பு) அவஸ்தையில் நிகழுவது ஸ்தூலசரீரம்; ஸ்வப்னவஸ்தையில் காண்பது ஸூக்ஷ்ம தனு; ஸுஷுப்தி யவஸ்தையிலுள்ளது காரணதேகம். இம்மூன்றுக்கும் சாக்ஷியாயிருப்பது ஆத்மா.

ஆத்மா அழிவில்லாதது, அகண்டமானது, நித்தியமானது, சத்தியமானது, சுத்தமானது, எரிக்கப்படாதது, நனைக்கப்படாதது, உலர்த்தப்படாதது. பலவிதமாய்க் கூறுவானேன்? அது ஸர்வஸக்தியும் பொருந்தியது.

ஆத்மாதான் நமது நிஜஸ்வரூபம். நாம் நம்மை அறிந்துகொள்ள வேண்டுமானால் கடத்திரயங்களை ஆசரயித்துள்ள அவஸ்தாத் திரயங்களைத் தாண்டிச் செல்லவேண்டும். ஆண்டு நமது ஆத்மஸ்வரூபம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இதைப்பற்றி 'ஞானசூரியன்' என்னும் நூலிலுமஃ—

"சாக்கிர சொப்பனங்க ளிரண்டையுந் தாண்டிப் போனால்
சூக்கமாஞ் சுழுப்தி வந்து தொல்லிரு ளாகி மூடும்
ஆக்கமு மழிவு மில்லா தறிவினு லதுவும் போனால்
போக்கொடு வரவு மில்லாப் பூரணப் பொருள்வந் தெய்தும்"

என்று கூறப்பட்டிருப்பதை ஊகித்தறியவேண்டும்.

இத்தகைய ஆத்மதரிசனந்தான் தன்னையறிதல் அல்லது கடவுள் தரிசனம் என்று சுருதிகள் கோஷிக்கின்றன.

இதற்குப் பிரமாணமாக ஸ்ரீமத் தாண்டவராயஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளியுள்ள கைவல்ய நவநீத கிரந்தத்திலிருந்து ஒரு பாசுரத்தை ஈண்டு வரைவாம்:—

"தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிவா யானா லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே."

ஆகவே, நாம் இதனால் ஆத்மாவே தானென்றும், தானே ப்ரஹ்மம் (கடவுள்) என்றும் அறிந்துகொண்டோமல்லவா?

'கடவுள்' என்னும் திருநாமத்துக்கேற்ப, நாம் தேகத்திற்குள்ளிருக்கும் ஹ்ருதயாம்பரவாசியான ஸ்ரீமந்நாராயண பரமாத்மாவை (பரசிவத்

தை)த் தியானித்து, ஸர்வ துக்கநிவர்த்தியும், பரமானந்த பிராப்தியும் பெற்று ஜீவன் முக்தராய்ச் சுகித்திருப்பதைவிட்டு, வேறே தெய்வமுண் டெனப் பலவிடங்களிலுஞ் சுற்றித்திரிவது எவ்வாறிருக்கிறதெனின் :— ஒருவன் தன்கையிலுள்ள மாணிக்கத்தை யெறிந்துவிட்டு வளையற்றுணுக் கைத் தேடுவதை யொத்திருக்கிறது. இதைப்பற்றி ஞானவாசிட்டத்தில் கூறப்பட்டுள்ள விஷயமாவது:—

"திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே
தெய்வந்தேடல்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும்
வேட்கை போலாம்"

என்பதாம்.

இவ்வுலகத்தில் அஞ்ஞானிகளின் பாவனைக்காக கோவில்களும், விக்கிரகங்களும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், தத்துவமறிந்தவன் எப்போதும் தேகாலயத்திலுள்ள சிதாகாசத்தேவதையை ஆகாச சாந்தி மலராலே ஆராதிக்கவேண்டும். இவ்வாராதனை சங்கேதமாயிருப்பினும் முமுக்ஷுக்களின்பொருட்டு இவ்விடத்தில் சங்கிரகித்துக் கூறப்படுகிறது.

## கடவுள் பூஜை:—

பூஜையை விரும்பும் ஒருவன் ஏகாந்தமும், பரிசுத்தமுமான வோரிடத்தில் தர்ப்பாஸனத்தை விரித்து அதன்மேல் இரத்தினக்கம்பளத்தை யாவது அல்லது சாஸ்திர விதிப்படி (யஜ்ஞமூலமாய்) கிரகிக்கப்பட்ட மான்றோல் புலித்தோல் இவ்விரண்டிலேதாவதொன்றையாவது விரித்து, அதற்குமேல் வெள்ளை வஸ்திரத்தை மடித்துப்போட்டு, சுருதிகளில் மிக முக்கியமாய்க் கூறியுள்ள சித்தாஸனம், பத்மாஸனம், சுகாசனம் என்னும் இம்மூன்றி லேதாவதொரு ஆஸனத்தைச் செவ்வையாய்ச் சேர்த்து, இடுப்பு, முதுகு, கண்டம், சிரம், கண் முதலிய வங்கங்களை நேராக ஸ்தம்பம்போலிருக்குமாறுசெய்து (உத்தரமுகமாயுட்கார்ந்து என்பது ரகஸியம்) ஆசார்யரையும், இஷ்டதேவதையையும், மகான்களையும் அன்புடன் தொழுது, நிச்சல மனதுடையவனாய் இவ்வாறு சிந்திக்கவேண்டும்:—

"புடத்வய விநிர்முக்தோ
வாயுர் யத்ர விலீயதே
தத்ர ஸம்ஸ்தம் மன: க்ருத்வா
தம் த்யாயேத் பார்த்த ஈஸ்வரம்" (உத்தரகீதா)

இதன்கருத்தாவது: "இரண்டு நாசியினின்றும் வெளிப்பட்ட வாயுவானது எங்கே இலயமடைகின்றதோ, அங்கே மனதை செவ்வையாக நிற்கச் செய்து, அந்தப் பரமேச்வரனை பார்த்த! தியானிக்கவேண்டும்" என்பதே.

இவ்வாறு தியானிக்கும்போது கவனிக்கவேண்டிய மற்றொரு பரம ரகஸ்யமுளது. அஃதாவது:—

"கமத்யே குரு சாத்மானம்
ஆத்ம மத்யேச கம் குரு
ஆத்மாநம் கமயம் க்ருத்வா
நகிஞ்சி தபி சிந்தயேத்" (உத்தர கீதா)

இதன் கருத்தாவது: "ஆகாயமத்தியில் ஆத்மாவைச்செய்; ஆத்மமத்தியில் ஆகாசத்தைச்செய் (பாவி). ஆத்மாவை ஆகாயமயமாக (ப் பாவித்து) ச் செய்து, வேறொன்றையும் கொஞ்சமாகிலுஞ் சிந்திக்கக்கூடாது" என்பதே.

இவ்வனுபவந் திடமாகும்பொருட்டு சிவரகஸ்யத்திலுள்ள 'நிஷ்டாநுபூதி' யென்னும் யோகநூலிலிருந்து இரண்டுபாக்களை ஈண்டு வரைவாம்:

"இயம்புமா தனங்க டம்மிலொன் றுறவே
யிடைகளுஞ் சிரங்க ளூ னேராய்
வயம்பெறத் தம்ப மெனநிறீஇ யிருந்தே
மனமது வடிவினை யுறாமல்
நயம்பெற வுன்னு துன்னியெப் போது
நடுநிலை தன்னைநீங் காமற்
றயங்கிய சுத்த மசுத்தமல் லாத
தனிநிலை பொருந்துதல் சமாதி."

"பங்கயா தனத்திற் படியவே யிருந்து
பரமசற் குருவினைத் தொழுதே
யிங்கிரு விழியும் விசும்புற நிறுவி
யெழுங்கருத் தினையக மாக்கி
அங்குறு நிலையா லடங்கிடா மனத்தி
னலைவறுத் தறிவறி யாமை
துங்கமா யொழியச் சாதனை புரிந்தே
தூங்காமற் றூங்குக மாதோ."

கடவுள் சர்வவியாபியா யிருப்பினும் அவரை முற்கூறியவண்ணம் இக்கடத்திற்குள்ளேயே சோதித்தறியவேண்டியிருப்பதால் அவருக்குக் 'கடவுள்' என்னுந் திருநாமம் ஆன்றோர்களால் இடப்பட்டிருக்கிறது.

ஆகையால், நாம் நமது தேகாலயத்தின் மத்தியில் இருதயாம்பரத்தில் (ஹ்ருதய குகையில்)

"ஆத்மா நாராயணோ ஹரி:
ஹ்ருதயே ஸம்ஸ்ர திஷ்டித:

என்னும் பைங்களோபநிஷத் வாக்கியப்படி அதிரகஸ்யமாயுள்ள ஆத்மலிங்கத்தை (கடவுளை) ஸதா பஜித்து அவரருள்பெற்று நித்ய ஸுகியாய்ச் சுகித்திருப்போமாக. ஓம் தத் ஸத்.

V. லக்ஷ்மணரெட்டி, ஸ்கூல்மாஸ்டர்
வீரபாண்டி, அரியானூர், சேலம்.

# பாரதம்பாடிய பெருந்தேவனார்

(ஒரு சிற்றுராய்ச்சி)

ஆன்மாக்கள் வீடடையும் பேற்றைத்தரும் நான்மாடக்கூடலென்னும், மூத்தமிழ் விளங்கும் உத்தமமதுரையில், மலைமகளுருவாய்வந்த கவிவாணர்கள், மலைமகள் தலைவர்தந்த, செவ்விய நறவஞ்சேர்ந்த சீரியமொழியெனும், நம் தாய் மொழியினை நன்காராய்ந்து சிக்கெடுத்தவர் நக்கீரர், கபிலர், பரணர், கல்லாடர், சீத்தலைச் சாத்தனுர் முதலிய நல்லிசைப்புலவர் நாற்பத்தொன்பதின்மர். பாரதம் பாடிய பெருந்தேவனுர் என்பவர் அப்புலவர் குழாத்துள் நாவீறுபடைத்தவர்களில் ஒருவர்.

தாய்நாடென்னும், நம் தமிழகத்தில், "பெருந்தேவனுர்" என்ற நல்லிசைப்புலவ்ர் மூவருளர். அவர்களில் மற்றை இரண்டுபேரினும் வித்தியாசம் விளங்குதற்பொருட்டு, இன்னேர்க்குப் 'பாரதம்பாடிய' என்ற அடைமொழியைக் கொடுக்கப்பெற்றது· அதனுல் இவர் "பாரதம் பாடிய பெருந்தேவனுர்" என்று அழைக்கப்படுகின்றுர். மற்றை யிருவருள் 'கவிசாகரப் பெருந்தேவனுர்' என்பவர் கடைச்சங்ககாலத்தில் இவருடன் ஒப்பவீற்றிருந்து, அமிழ்தினுமினிய ஆனுத்தமிழினை ஆராய்ந்தபுலவர். மற்றெருவர் பொன்பற்றியூர் புத்தமித்ரர் செய்த இலக்கணமாகிய வீரசோழியத்திற்கு உரையெழுதிய பெருந்தேவனுர். இவர் பிற்பட்டவர். பாரதம்பாடிய பெருந்தேவனுர் அவதரித்த நாடு சான்றேர் உடைத்தென்னும் தொண்டை நன்னுடு. இதனை,

"சீருறும் பாடல்பன் னீரா யிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ் சங்கப் பலகையி லேற்றிய வித்தகனுர்
பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்
மாருதம் பூவின் மணம்வீ சிடுந்தொண்டை மண்டலமே"

எனத் தொண்டைமண்டல சதகத்தில் பைங்கிளி என்னும் படிக்காசுப்புலவர் கூறுகின்றுர். நிற்க, இவர் அவதரித்தநாடு தொண்டைநாடாயிருந்தாலும், இவர் பெரும்பாலும் கவி அரசாய் செங்கோனடாத்தியவிடம் கன்னிநாட்டின் தலைநகராகிய மதுரையே.

பாரதம் பாடிய பெருந்தேவனுர் கடைசசங்ககாலத்தவர் என்றபடி, இவர் சற்றேறக்குறைய ஆயிரத்தெண்ணூற்றைம்பது வருடங்கட்கு முன்னர் இருந்தவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இவர் அரசன் வாழ்த்தாகப் பாரதத்தின் முதலில் கூறிய,

"வண்மையாற் கல்வியான் மாபலத்தா லான்வினையால்
உண்மையாற் பாரா ளுரிமையால்—திண்மையால்
தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றுனே
டியார்வேந்த ரேற்பா ரெதிர்"

என்ற செய்யுளினுலும் அதனையடுத்த கட்டுரையில், "பல்லவர்கோமான் பண்டிதாராலயனைப் பரவினேம்" என்று கூறியிருப்பதனுலும், இவர்தென்ளாற்றிற் போர்வென்ற பல்லவராசனெருவனது காலத்திலிருந்தவர் என்றும் தெரிகிறது.

கடைச்சங்ககாலத்துத் தொகுக்கப்பட்ட நூல்களாகிய எட்டுத்தொகையுள், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்பனவற்றின் முதற்செய்யுளாகிய கடவுள் வாழ்த்தும், மற்றுஞ்

சில செய்யுட்களும் இவரால் இயற்றப்பட்டன. அச்செய்யுட்களில் பெரும்பான்மையும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளைப்பற்றிக் கூறியிருப்பதால், இச்செந்நாப்புலவர் சைவமதத்தைச் சார்ந்தவரென்பது தெற்றென விளங்கும். நம்தேவனார் கடவுள்வாழ்த்தாகக் கூறிய புறநானூற்றில்,

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங்கொன்றை
யூர்தி வால் வெள்ளேறே சிறந்த
சீர்கெழு கொடியு மவ்வேறென்ப
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை
பதினெண் கணனு மேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கு மேம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடை பொலிந்த வருந்தவத் தோற்கே"

என்ற செய்யுளில் அரவாபரணனுக்குரிய மலரும், மாலையும், வாகனமும், கொடியும், அவர் கடுவுண்டருளிய கருணையும், ஆன்மாக்களுக்காக எடுத்த உருவமும், சென்னியிலே கங்கையும் மதியுமணிந்தமையும், எல்லாவுயிர்க்குங் காப்புப்பூண்டமையும் சொல்லப்படுகின்றது. இச்செய்யுளிலே, "பெண்ணுரு வொருதிறனாகின் றவ்வுருத் தன்னுளடக்கிக் கரக்கினுங் கரக்கும்" என்ற அடிகளில், படைப்பின்பொருட்டுத் தமது சத்தியை ஒருபாலாக தோற்றுவித்துப் பின்னர் உலகை யொடுக்குங்காலத்தில் தமது சத்தியைத் தம்முள்ளே மறைத்துக்கொள்வர் என்பது தோன்ற நிற்றலின், இவர் சைவசமயத்தின் உள்ளுறைபொருளெல்லாம் தெளிய வுணர்ந்தவரென்பது மலைவிளக்காம்.

நம்புலவர் பெருந்தகையின் குலத்தைப்பற்றிய ஆராய்ச்சியாதொன்றும் புலப்படவில்லை. சிறுபான்மையோர் இவரை வேளாளர் எனக் கூறுவர்.

எட்டுத் தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலியவற்றின் கடவுள் வாழ்த்தாகக்கூறிய செய்யுட்களும், மற்றும் பொருணயம், சொன்னயம் முதலிய பன்னயங்கள் சொட்டும் செய்யுட்கள் பொருந்திய பாரதமும் தவிர, இவர் வேறு பெரிய நூற்கள் இயற்றியதாகத் தென்படவில்லை. திருவள்ளுவமாலையில்,

"எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்"

என்ற வெண்பாவும், இவர் இயற்றியதே. திருவள்ளுவரின் திருப்பாடலைச் சிறப்பிக்கவந்த இவர் மூன்றாமடியில், இராமாயணம், மனுதருமநூல், வேதநூல் என்பவற்றிற்கு முன்னர் பாரதத்தை வைத்திருப்பதால், இவர் தாம் இயற்றிய பாரதம் என்னும் நூலின்கண், எவ்வளவு பற்றுவைத்துளார் என்பது அங்கைநெல்லிக்கனி.

இவரது பாரதம், பாடலும் வசனமும் விரவிவரும் "சம்பு" வென்னும் நடையிலுள்ளது. தொல்காப்பியத்தில்,

"தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே."

(தொல்-நச்சி-பொருள்,-செய்-சூத்திரம் 550)

தொன்மை என்பது உரைவிராய் பழைமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது. உதாரணமாக பெருந்தேவனார் பாரதமும், தகடூர் யாத்திரையும் காண்கவென்று காணப்படுகின்றது. இதுபற்றியே இந்நூலை 'உரை யிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்று கூறப்படும். இந்நூலின் இடையிடையே சிற்சில அகவற்பாக்களும், பொருத்தமுள்ளவிருத்தங்களும், காணப்படுகின்றனவாயினும், நூல் பெரும்பான்மையும் வெண்பாவினாலேயே மிளிர்ந்து கிடப்பதால், இதற்குப் பாரத வெண்பாவென வழங்கப்படும். இந்நூலினின்று பெரும்பான்மையான செய்யுட்களைத் தொல்காப்பியவுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டியிருப்பதனால், உச்சிமேல்வைத்துப் புகழப்படும் நூற்களில் இதுவும் ஒன்றாகும். தேவனார் பாரதம் பன்னீராயிரம் பாடல்கள் பொருந்தியவை என்று கூறப்படினும், தற்போது எண்ணூறு பாடல்களே காணப்படுகின்றன. அவை உத்தியோகபருவம் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் உள்ளவை. இவர் இயற்றிய செய்யுட்கள், சுருங்கச் சொல்லப்பட்டும், விளங்கவைத்தும், நவின்றோற்கு இனிமைதரும் நன்மொழியும் புணர்த்தி,

"தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே,
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலின் தேங்கின்
றனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
யினித்தநறு நெய்யளைந்தே இளஞ்சூட்டி னிறக்கி
யெடுத்தசுவைக் கட்டியினு மினித்திடும்..........." (அருட்பா)

ம. து. சு. ராமகிருஷ்ணன் மடப்புரம்,
திருவாரூர் (S.I.Ry.)

---

## பகவத்கீதை வசனம்.

(212-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஈண்டு ஸ்ரீபகவானது திருக்கருத்துவருமாறு:—அகர்த்தா அபோக்தா பரமானந்த அத்விதீய சத்திய சுவப்பிரகாசமாகிய பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்மசாக்ஷாத்காரம் நிர்விகற்பமும், மகாவாக்கிய ஜன்னியமும் விசாரத்தாலே நிச்சயிக்கப்பெற்ற பிராமாண்யமுடையதும், எல்லாவகையாலும் அப்பிராமாண்ய சங்கையற்றதுமாம். அதனால் அஞ்ஞானம் அகலும்; அகலவே அதன்காரியங்களாய கர்த்திருத்து வாதி அபிமானம்மற்ற உண்மையாய முக்கிய சந்யாசியோ அவித்தையோடுகூடிய சர்வகருமம அழிவாலே கேவலம் சுத்தசொரூபனாகி அந்நிமித்தக சரீரக்கவர்ச்சியைமீண்டும் ஒருகாலும் அடையான். எதனாலெனில் தத்துவவேத்தாவின் சர்வமயல்களும் அவித்தையாகிய காரணங்கெடவே கெடலினால் என்றறிக. அவித்தையுடையவனும் கர்த்திருத்துவாதி யபிமானமுடையவனும் தேகமுடையவனும் ஆகியவனே மூவகையினனாவன்; இராகத்துவேஷ தோஷமகிமை

யாலே தன்னிச்சையாலே காமிய கருமத்தையும் நிஷித்த கருமத்தையும் செய்யும் மோக்ஷசாஸ்திர அநதிகாரி முதலாமவனாவன்; பூர்வஞ்செய்த புண்ணிய கருமவசத்தாலே சிறிதுமாத்திரம் நஷ்டமடைந்த இராகாதியை யுடையவனும், விதிபூர்வகம் சர்வகருமபரித்தியாகம் செய்வதில் அசமர்த்தமனாயினும், நிஷித்தகாமிய கருமங்களைப் பரித்தியாகஞ் செய்து மனத்தூய்மையின் பொருட்டுப் பல இச்சையைப் பரித்தியாகித்து நித்திய நைமித்திகங்களையே செய்பவனும் மோக்ஷசாஸ்திர அதிகாரியாய கௌண சந்யாசியும் ஆகியவன் இரண்டாமவனாவன்.

நித்தியநைமித்திக அனுஷ்டானஞ்செய்து மனத்தூய்மை பெற்றபின் விவிதிஷையடைந்தவனும், சிரவணாதி சாதனங்களாலே மோக்ஷசாதன ரூப ஆன்மஞான சம்பாதனஞ்செய்யும் வேட்கையனும் சாஸ்திரவிதி பூர்வகம் சர்வகரும பரித்தியாகத்தால் வேதாந்தசாஸ்திர விசாரம் செய்யும் பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவின் சரணத்தையடைந்தவனும் ஆகிய விவிதிஷா சந்யாசி மூன்றாமவனாவன். முதலாமவனுக்குச் சம்சாரித்தன்மை வெளிப்படையேயாம்; இரண்டாமவனுக்குச் சம்சாரித்தன்மை அநிஷ்டம் இஷ்டம் மிசிரமுமென்பதாலே யருளப்பட்டது. கடையவனுக்குச் சம்சாரித்தன்மை ஆறுவதத்தியாயத்தில் வினாவி நிண்ணயித்தருளப்பெற்றது. ஆகையால் அவித்தையாதிகாரணமிருப்ப அஞ்ஞானிக்குச் சம்சாரித்தன்மை யின்றியமையாதாம். ஒருவனுக்கோ ஞானப்பிரதிகூல சரீரமுண்டாம்; ஒருவனுக்கோ ஞானானுகூல சரீரமுண்டாம்; இத்துணை விசேடமாம் தத்துவமுணர்ந்தவனோ அவித்தைமுதலிய சமுசாரகாரணம் அபாவமாதலின் தானாகவே கைவல்லிய மோக்ஷமடைவான் என்பதாக ஸ்ரீபகவானிச் சுலோகத்தில் இரண்டையுங் குறிப்பித்தருளினார்.

[ஆன்மஞானமில்லாத அஞ்ஞானியின் சம்சாரித்தன்மையில் கருமபரித்தியாக அசம்பவரூபஹேது முன்னர் அருளப்பெற்றது; அவ்வஞ்ஞானியின் கருமத்தியாக அசம்பவத்தில் யாது ஏதுவாம், எவ்வேதுவினாலே கருமத்தியாகம் செய்யமுடியாதவனாகின்றான் என அருச்சுனனுக்கு அறியும் அவாவரக் கருமஹேது பூத அதிஷ்டானாதி ஐந்தனுள் அஞ்ஞானிகளின் தாதான்மிய அபிமானமே கருமத்தியாக அசம்பவத்திலேதுவாம் என்னும் பொருளை யிப்போது ஸ்ரீபகவான் நான்கு சுலோகங்களால் வருணித்தருளுகின்றார்: அவ்வைந்தும் வேதாந்தசாஸ்திரத்தைப் பிரமாணமாக வுடையதாம், அவற்றை நீக்கும்பொருட்டு இன்றியமையாதுணரத் தக்கதாம் என்னும் பொருளை முதற் சுலோகத்தி லருளிச்செய்கின்றார்]

ஹே பெருந்தோளையுடைய வீரனே! சர்வகருமசித்தியின்பொருட்டுக் கூறப்புகும் அதிஷ்டானாதி ஐந்து காரணங்களை எமது மொழியால் நிச்சயஞ்செய்தி. அவை சர்வகரும சமாப்தியையுடைய வேதாந்த சாஸ்திரத்தில் இயம்பப்பெற்றுளது.

ஹே அருச்சுன! இலௌகிக வைதிக கருமசித்தியின்பொருட்டுக் கூறப்படும் அதிஷ்டானாதி ஐந்துகாரணங்களைச் சர்வஞ்ஞபரமேசுரராகிய நமது வசனத்தால் நிச்சயஞ்செய்தி; அதாவது அவ்வைந்தின் வடிவத்தை யுணர நீ சாவதானனாயிருத்தி. அவை முற்றிலும் அறியத்தகாதனவல்ல; மற்றோ, ஒருமை மனத்தனாலுணரத்தக்கனவேயாம். அவற்றை யறிவால் மனத்தை யொருமைப்படுத்தி யருளுவார் ஸ்ரீபகவான் அவ்வைந்தையும் துதித்தருளினார்; ஹே மகா பாகோ என்னும் விளியால் அவற்றின் றுதியின்பொருட்டு இப்பொருள் குறிப்பித்தருளப்பெற்றது; இவ்வைந்தையு

மூணர்வதில் மகாபராக்கிரமமுடைய சிரேஷ்ட புருடனே சமர்த்தனுவன்; அசிரேஷ்டன் சமர்த்தனுகான்.

நீயும் மேன்மைமிக்கவனுதலின் அவற்றை அறிவதில் ஆற்றல் உடையவன் ஆவாய். அவ்வைந்தும் தேவரீரது திருவாக்கா லறியத்தக்கனவேயா? அல்லது அவற்றில் வேறு பிரமாணமும் உளதா? எனவுண்டாம் சங்கையை நீக்கித் தந்திருவாக்கில் நம்பிக்கை வருதற்கு வேதாந்தசாஸ்திரப் பிரமாணத்தை யவற்றில் அருளினுர். பிரஹ்மாநந்தரூப நிரதிசயபுருடார்த்த அடைவின் பொருட்டும் ஜன்மமரணுதி சர்வ அநர்த்த நிவிருத்தியின் பொருட்டும் அறியத்தக்கதாகிய ஜீவப்பிரஹ்ம ஒருமையுணர்ச்சிக்கு உபயோகமான சிரவணுதிசாதன முதலிய பதார்த்தங்களைக் கூறும் சாஸ்திரம் உபநிஷத் வடிவமான வேதாந்தமென்னும் சாங்கியமாம். அதன்கண் அவ்வைந்தும் அறையப்பெற்றுள்ளனவாம். சர்வகருமங்களையும் சாதனமாகக் கூறுவதும் பின் சருவகருமங்களையும் விடுமாறருளுவதும் ஆகிய வேதாந்த சாஸ்திரம் அவ்வைந்தையும் அறையும். அவற்றை யுலகத்தார் மயலுணர்ச்சியாலே ஆன்மருபமாய்க் கவர்ந்துளார். அவ்வைந்தையும் ஆன்மதத்துவ ஞானத்தாலே பாதஞ்செய்யும் பொருட்டுப் பரித்தியாச்சிய ரூபத்தால் வேதாந்த சாஸ்திரம் விளம்புகின்றதேயல்லாமல் அவற்றை வெறிதே கூறுவதிற் கருத்தின்றும். அத்விதீய ஆன்மாவைக் கூறுவதன்கண்ணே அதற்குக் கருத்தாம். கருத்திதுவாம்:—தேகாதி யனுன்மபதார்த்தங்களின் தருமரூப கருமமே அசங்க ஆன்மாவின்கண் அவித்தையாலே அத்தியாரோபிதமாம். உண்மையிலின்றும். இவ்வாறு வேதாந்தசாஸ்திரம் ஆன்மாவின் வாஸ்தவவடிவப் பிரதிபாதனஞ் செய்கின்றபோது சுத்த ஆன்ம ஞானத்தாலே அத்தியாரோபித கருமம் பாதமாதலின், சர்வகருமங்களின் அந்தஞ் செய்யப்படும். அதிஷ்டான ஆன்மஞானமின்றி வேறெவ்வுபாயத்தாலும் கருமாந்தஞ் செய்யமுடியாதாம். இதனுலே அசங்க ஆன்மாவின்கண் அக்கரும அசம்பந்தத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டு மாயாகற்பித அநான்ம பூத பஞ்சகருமகாரணம் வேதாந்த சாஸ்திரத்தி லனுவதிக்கப்பட்டுளதாமன்றி அதைப் பிரதிபாதிப்பதிற் கருத்தின்றும். ஆகையால் அத்வைத ஆன்மாமாத்திரத்திற் கருத்தாம். அக்கருத்திற்கு இங்கு ஆணியுண்டாகாதாம். ஆதலின் ஸ்ரீபகவான் வேதாந்த சாஸ்திரத்தில் கருமாந்தத்தன்மையை யருளினுர்; இதனை மூன்னருங்கூறி யருளியுள்ளார்.

[வேதாந்த சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடைய கருமபஞ்சகாரணம் ஆன்மாவிற்கு அகர்த்தாத்தன்மை சித்திக்கும்பொருட்டுப் பரித்தியாச்சிய ரூபத்தாலே அறியத்தக்கதென்பது முன்னருளப்பெற்றது; அவ்வைந்தும் யாவையென அறியும் வேட்கை யருச்சுனனுக்கு உண்டாகியவழி ஸ்ரீ பகவான் அருளல்]

ஹே அருச்சுன! அதிஷ்டானமும் கர்த்தாவும் நானுவகையாய கரணமும் நானுவகையாய பின்னுபின்ன சேஷ்டையும் இக்காரணங்களில் ஐந்தாவதாகிய தைவமும் ஆகிய ஐந்தும் கருமகாரணமாம்.

ஹே பார்த்த! இச்சை, த்வேஷம், சுகம், துக்கம், சேதனம் என்பதாதி தரும அபிவியக்தியாசிரயரூப பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியரூப தூல சரீரத்திற்கு அதிஷ்டானமெனப் பெயராம்; யான் கருத்தாவென அபிமானமுடைய ஞானசக்திப்பிரதான அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் காரியரூபம அகங்காரமாம். அது அந்தக்கரணம் புத்தி விஞ்ஞானம் என வழங்கப்பெறும்; அது ஆன்மாவோடு தாதாத்மிய அத்தியாசத்

தால் தன்பாலிருக்கும் கர்த்திருத்து வாதிகளை ஆன்மாவின்கண் ஆரோபிக்கும். அதுவே கர்த்தாவெனப்படும். அக்கர்த்தாவின்பால் முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டான ஒப்புமையுண்டாம். சரீரரூப அதிஷ்டானம் ஆன்மாவும் ஆகாயாதிகளின் காரியமும் கனுப்பொருள்போல மாயையால் உண்டாக்கப்படுவதுபோல அகங்கார கருத்தாவும் ஆம். (தொடரும்.)

சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(214-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவ்வாறே அந்த மனிதன் ஏதாவது போக்கடித்து விட்டீர்களோ என்று கேட்க நேரிட்டது. அம்மாது "சாமான்கள் வாங்கிய பட்டி யெங்கோ விழுந்துவிட்டது. கிடக்கட்டும்" என்றாள். அம்மனிதன் "அது அவ்வளவாய் அவசியமல்லவாயினும் மனதிற்கு அதிருப்தியை யளிக்கத் தக்கதே" யென்றான்.

அவ்வாறே ஒன்றைப்பற்றி யொன்றாய் பேச்சுவளர்ந்து, சற்றுநேரத்திற்குமுன் ஒருவரையொருவர் அறியாத புதுமனிதர்களாயிருந்தவர்கள் இப்போது நெடுநாள் பழகிய நேசகர்கள்போல் கூச்சமின்றி சம்பாஷிக்கத் தொடங்கிவிட்டார்கள். அம்மாது மிக்க நாணயமான அழகிய வாலிபபுருடனைச் சற்றுநேரத்திற்குள் நமது மாயவலையிற் சிக்கச்செய்துவிட்டோம் என்றுதனக்குள் மிக்க சந்தோஷமடைந்தாள். அந்தோ "நம்மைத் தேடி வந்த ஆனந்தலிங்கின் சாமார்த்தியமான வலையில் நாமே சிக்கிக்கொண்டோமே" யென்று அவள் புத்தியிற் படாமற் போய்விட்டது.

அவள் தான் ஆற்றோரத்திலிருக்கும் நாவல்புரியென்ற நகர்க்கப்பால் மூன்றுமைல் தூரத்திலுள்ள ஒரு மாளிகையில் வசிப்பதாகவும், தன்பெயர் அமிர்தம்மாளென்றும் தான் சுயாதீனமாய்ச் சுகஜீவனம் செய்பவளென்றும் தன்னை யறியாது சம்பாஷணைப்போக்கில் கூறுபவள்போல் தானே ஆனந்தலிங்கினிடம் கூறினாள். தன்னைப்பற்றிய விஷயத்தைச் சாமார்த்தியமாய்க் கூறிவிட்டு, மெதுவாய் ஆனந்தலிங் விஷயத்தை யறிய முயன்றாள். ஆனந்தலிங் அதற்காகத்தானே எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவனைப்பற்றி யவள் அறிந்ததெலாம் கூடி அவன் தென்னாட்டானென்பதும் செல்வந்தனென்பதும், பெயர் கோபாலுப்பிள்ளையென்பதும் வேடிக்கையாய் இந்த நாட்டைப்பார்க்க வந்தவனென்பதுமே.

அவன் வேடிக்கையாய்ப் பிரயாணம் செய்வதால் அவனைநோக்கி அவள் நாவல்புரியை யறிவீரோவென்றாள். அவன் "இல்லை அங்கு இரண்டொருநாள் தங்கிப்பார்க்க விரும்புகிறேன்" என்றான்.

அம்மாது "அப்படியாயின் தாங்கள் அதைவிட்டுச் செல்லுமுன்பு நமது வீட்டிற்குவந்து போகவேண்டும்" என்று அன்போடு வேண்டிக்கொண்டாள்.

கோபாலுப்பிள்ளை மிக்க சந்தோஷத்தோடு அந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக்கொண்டார் என்று நாம் கூறவேண்டுவதில்லை. அவர்பாடு தேடப்போன பொருள் காலில் சிக்கியமாதிரியாயிற்று. அமிர்தம்மாள் தன் வீட்டின் அடையாளத்தையும் அதற்கு வழியையும் மிக்க குறிப்பாகவும் விபரமாகவும் ஆனந்தலிங்கிடம் கூறினாள். தன் விரோதியைத் தானே தன் வீட்டிற்கு அழைத்துக்கொள்வது அவள் மனதிற் சற்றேனும் படவில்லை.

படகு நாவல்புரி சேர்ந்ததே யிருவரும் படகைவிட்டிறங்கினார்கள். ஆனந்தவலிங் அமிர்தம்மாளை வண்டியில் மரியாதையோடு ஏற்றிவிட்டு வண்டி அங்கிருந்த யேடேறியிறங்குமட்டும் நின்றுபார்த்துக்கொண்டிருந்தான். பிறகு பொழுதமருமட்டும் நகரைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்து தீபம் வைத்தபின் ஒரு மூலையிலிருந்த ஹோட்டலில் ஒரு அறையில் தங்கினான்.

அதற்கிடையில் தன்பாலிய நண்பன்கூட தன்னைக் கண்டுகொள்ளாத விதமாய்த் தன் உருவத்தை மாற்றிக்கொண்டான். அன்றிரவே அமிர்தம்மாள் வீட்டை வெளியிலிருந்தே பார்வையிட்டுக்கொண்டு வரப்புறப்பட்டான். வழி தான் ஒருவரையும் கேட்காமலே தெரிந்துகொள்ளும் வண்ணமாய் அவன் மனதில் பதிந்துபோயிருக்கிறது. நிலவு பிரகாசமாய்க் காய்ந்துகொண்டிருந்தது. வானம் களங்கமற்றிருந்தது. நகரைக்கடந்து சுமார் இரண்டரைமைல் தூரம் சென்றதே அங்கிருந்த மேட்டின்மேல் ஏறிப் பார்த்தபோது சற்றுதூரத்தில் ஒரு அழகானவீட்டில் பிரகாசமாய் தீபங்கள் எரிந்துகொண்டிருப்பதைக் கண்டான். சற்றுநேரத்திற்குள் ஆனந்தவலிங் அவ்வீட்டின் எதிரில் வந்து நின்றான்.

அவ்வீடு மிக்க நேர்த்தியாய் அமைக்கப்பட்ட ஒரு தோட்டத்தின் முன்பக்கத்திலிருந்தது. அத்தோட்டத்தில் அழகான பலவித விருட்சங்களும் புஷ்பச்செடிகளும் கனிதரு மரங்களு மிருந்தன. கட்டிடத்தைச் சுற்றிலும் அகலமான ஒரு தாழ்வாரம் இருந்தது.

ஆனந்தவலிங் அவ்வீட்டினெதிரில் சென்று நின்றபோது தாழ்வாரத்தில் இருவர் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. வெளி வேலியில் செடிகொடிகள் அடர்த்தியாயிருந்ததால் பேசுகிறவர்களுடைய உருவங்கள் அவனுக்குப் புலப்படவில்லை. ஆயினும் பேசுகிறவர்கள் ஸ்திரீகளென்றும் அவர்கள் சந்தோஷமாகவே சம்பாஷிக்கிறார்களென்றும் தெரிந்தது.

ஆனந்தவலிங் உடனே மனமுடைந்துவிட்டான். ஏனெனில் "நாம் தவறான ஆளைப் பின்பற்றிவிட்டோம். அம்மாதோடு சம்பாஷிப்பவள் அம்பாலிகையாயின் அவள் துயரத்திலல்லவோ யிருப்பாள்" என்று எண்ணினான். உடனே இரண்டிலொன்று தெரிந்துகொள்ளவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு வெளிவாயிற்படியைக்கடந்து முற்றத்தில் நுழைந்தான். அங்கிருந்த பெரிய கட்டிடத்தின்பக்கத்தில் சமையல் செய்வதற்காக ஒரு சிறு கட்டிடமிருந்தது. அதனருகில் தண்ணீர்க் குழா யிருந்தது.

ஆனந்தவலிங் அக்குழாயைநோக்கிச் சற்றுதூரம் சென்றான். அச்சமயம் நாய் குலைக்கும் பயங்கர சத்தம் கேட்டது. சற்றுநேரத்திற்குள் ஒரு பெரிய நாய் செடிகளினிடையிற் புகுந்து ஆனந்தவலிங்கிருக்கு மிடத்தை நோக்கி உறுமிக்கொண்டே வந்தது. அதன் கண்கள் கொள்ளிக்கட்டை போல் ஜொலித்தன. ஆனந்தவலிங் அந்த நாய்க்குச் சற்றேனும் அஞ்சவில்லை.

அச்சமயம் "யாரங்கே?" என்று ஒரு தீக்ஷண்யமான ஸ்திரீயின் குரல் கேட்டது.

ஆனந்த:—"நான் ஒரு வழிப்போக்கன். கொஞ்சம் தாகசாந்தி செய்து கொள்ள உள்ளே வந்தேன்" என்றான்.

அம்மாது:—"நீ யுடனே வெளியில்போ—இந்த நாய் உன்னைக் கிழித்துப் போட்டுவிடும்" என்றாள்.

ஆனந்:—"நாயைக் கூப்பிட்டுக்கொள்" என்றான்.

அம்மாது:—"இல்லை, நான் நாயைக் கூப்பிடமாட்டேன். நீ யுடனே போய் விடவேண்டும்" என்று கூறிக்கொண்டே யம்மாதும் நாயின் பின்னால் அங்குவந்து "நீ யுடனே வெளியில் போ!" வென்றாள்.

ஆனந்தலிங் அவள் அபிர்தம்மாள் என்று தெரிந்துகொண்டு, "அம்மா நான் தாகவிடா யடைந்திருக்கிறேன். கொஞ்சம் ஜலம் அருந்த அனுமதி யளிக்கமாட்டீரா" என்றான்.

அம்மாது "பாதை வழியே சென்றால் ஒரு கால்வாயிருக்கிறது போ" என்றாள்.

ஆனந்:—"இக்குழாயில் கொஞ்சம் ஜலம் அருந்தலாகாதா?" வென்றான்.

அம்மாது:—"கூடாது போ! நாயை யுன்மேல் ஏவிவிடுவேன்" என்றாள்.

அச்சமயம் "வேண்டாம். அப்பரிதாபமான மனிதன்மேல் நாயை விடாதே. பாபம் அவன் தாகவிடாயோடு பசியாலும் தொந்திரவடைந்திருப்பான்" என்று ஒரு இனிய குரல் கேட்டது.

அதற்குப்பதில் முன் பேசியமாது:—"ஓ! இவன் யாரோ நாடோடியே. சற்றுதூரம் சென்றால் கால்வாயில் ஜலம் அருந்தலாம்" என்றாள்.

மாறுவேடமணிந்த ஆனந்தலிங், "அம்மா நான் அக்கால்வாய்க்குச் சென்று ஜலமருந்தப்பயப்படவில்லை. எங்கே சேற்றில் விழுந்து என் உடைகளைக் கெடுத்துக்கொள்வேனோவென்று பயப்படுகிறேன்" என்றான்.

அம்மாது:—"அடே முரட்டுப்பயலே! நீ யிக்குழாயில் ஜலம் அருந்த விடவேமாட்டேன் என்று தீர்மானமாய்க் கூறுகிறேன்" என்றாள்.

ஆனந்:—"நான் இதில் ஜல மருந்தியே தீர்வேன் என்று கூறுகிறேன்" என்றான்.

அம்மாது:—நீ யுடனே போய்விடு என்று எச்சரிக்கை செய்கிறேன்.

ஆனந்:—நான் தாகத்திற்கு ஒரு மிடறு ஜலம் கேட்கிறேனேயொழிய வேறொன்றுமில்லை. ஆகையால் உன் நாயை யழைத்துக்கொள் என்று உனக்கு எச்சரிக்கை செய்கிறேன். நான் ஜல மருந்தாமல் போகமாட்டேன்.

அம்மாது:—நீ ஒரு துளிகூட அருந்தப்போகிறதில்லை.

அச்சமயம் "பாபம் அம்மனிதன் ஜலமருந்திப் போகட்டும்" என்று மறுபடி அந்த மெல்லிய குரலின் சத்தம் கேட்டது.

(தொடரும்.) ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்.

**கனம் அலெக்ஸாண்ட்ரா மகாராணியார்:**—இயற்கையாகவே நற்குண நற்செயல்களிற் சிறந்து விளங்கியவரும், நமது அரசர் பெருமானின் அன்னையாருமான கனம் அலெக்ஸாண்ட்ரா மகாராணியார் 1925-ம் வருஷம் நவம்பர் மீ 20உ சுக்கிரவாரம் மாலை 5½-மணிக்கு இந்நிலவுலகத்தைவிட்டு விண்ணுலகடைந்த செய்தி அனைவருக்கும் துக்கத்தை யுண்டாக்கிவிட்டது. உத்தமர் பிரிவுக் கிரங்காதவருமுண்டோ?

ஏழை யெளியவர் விஷயத்தில் இம்மகாராணியார் உள்ளன்புடன் காட்டிவந்த இரக்கம் பாராட்டத்தக்கது. உயர்ந்த அந்தஸ்திலிருந்த இவர் சுயநலத்தைப் பெரிதும் கவனியாது பொதுநல நோக்கிலிருந்து, மனத் தளர் வெய்தியவர்க்குப் பேருதவி புரிந்து வந்தார். இந்நோக்கம் இத்தகை யோர்க்கு வருவது புகழத்தக்கதே. இவருடைய ஆன்மா சாந்திபெறுவதாக.

மலாய் நாட்டிலுள்ளவர்க்கோர் விஞ்ஞாபனம்.

நம்முடைய ஆனந்தபோதினி ஏஜண்டு S. இராமாநுஜாசாரியர், சென்ற 1925ஞு ஜூலைமீ பினங், சிங்கப்பூர் முதலிய மலாய் நாடுக ளில் கொஞ்சகாலம் சுற்றுப்பிரயாணஞ்செய்து போதினிக்குச் சந்தா தாரர்கள் சேர்க்கவும், நம் பிரசுர புத்தக விற்பனைகளுக்கு ஆர்டர்கள் வாங்கவும் போயிருக்கிறார். இதுவரையில் பினங்கிலும் ஈப்போவிலும் இருந்து இப்போது கோலாலம்பூருக்குப் போய் இருக்கிறார் ஆதலின், அந்நாடுகளில் ஆங்காங்குள்ள நம் சந்தாநேயர்களும், மற்றைய தமிழபி மானிகளும், நாட்டுக்கோட்டை நகரத்தாராகிய கனவான்களும் அவ ருக்கு வேண்டிய உதவிசெய்து நம் ஆனந்த போதினிக்குச் சந்தாதார ராகச் சேர்ந்தும், தங்கள் நேயர்களையும் சேர்த்தும், நம் பிரசுர புத்த கங்களுக்கு ஆர்டர் கொடுத்தும் நமக்கு உற்சாகமூட்டும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். பத்திராதிபர்.

புதிய அலாரம் மணிகள்:—ஜெர்மனியில் திருடர் வருவதைக் காட் டும் புதிய அலாரம் மணிகள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றனவாம். மனித தேகம் சிறிது உஷ்ணத்தை வெளியிடுகிறதென்ற கொள்கையை அநு சரித்து இப்புதிய அலாரம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. மனிதன் அறைக்குள் வந்தால் அவ்வறையின் உஷ்ணநிலை அதிகரிக்கும். அம்மனி தன் திருடனாயிருந்து அவன் தேகத்தை அசைத்து இரும்பு முதலியவை களை உருக்கச்செய்யும் முயற்சியால் அறையின் உஷ்ணம் அதிகமாகின்றது. இவ்வாறு உஷ்ணம் அதிகமானவுடன் அவ்வுஷ்ணம் அதற்கெனச் செய்யப் பட்டிருக்கும் எலெக்டிரிக் கரண்டில்தாக்க அது அலார மணியை அடிக் கின்றது. வீட்டுச் சொந்தக்காரர்கள் நடமாடும்போது மணி யடிக்காம லிருக்க மணியடிக்கும் கருவியைப் படுக்கப்போகும்வரையில் நிறுத்தி வைக்கவேண்டுமாம்.

பன்றி ஈன்ற குழந்தை:—தர்மபுரி தாலூக்கா நல்லம்பள்ளி பிர்க்கா வைச் சேர்ந்த பெட்டே கவுண்டனூரில், சென்றவாரம் ஒரு பன்றி சூலா யிருந்து குட்டிபோடும் சமயம் மேற்படி பன்றியானது மிகவும் வேதனைபட் டுக்கொண்டிருந்து கடைசியில் தன் இனமான குட்டிபோடுவதற்குப் பதி லாய் மனித உருவத்தில் சிறிதும் வித்தியாசமில்லாத குழந்தை ஒன்றை ஈன்றிருக்கின்றது. இதன்றியும் மேற்படி பன்றிக்கு வேறே குட்டிகளொன் றும் கிடையாது. மேற்படி பன்றியானது மேற்படி குழந்தையைவிட்டு கவனிக்காமல் அப்புறம் சென்றுவிட்டது. மேற்படி வீட்டார் குழந் தையை யெடுத்துப் பாலூட்டி வருகிறார்கள். குழந்தை உயிரோடுதா னிருக்கிறது. இத்தியாதி ஆனந்த அற்புதக் காட்சியைக் கண்டுகளிக்க ஜனங்கள் திரள் திரளாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். கடவுளின் அற்புத செய்கை இவ்வாறிருக்கிறது என்று 'சுயராஜ்யாவில்' ஒரு நிருபர் எழுதுகிறார்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## தரோதனஸ்ரு தைமூ—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848, பசலி 1335—கோல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344, இங்கிலீஷ் 1926ஸ்ரு ஜனவரிமூ—1926ஸ்ரு பிப்ரவரிமூ

| தைமீ | ஜனவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | ●13-35 | உத்50-30 | சித்60 | கரிநாள், சூரியகிரகணம் பொங்கல் பண்டிகை தை அமாவாசை மார்கழிமீ 30உ |
| 2 | 15 | வெ | பிர4-33 துதி55-33 | திரு43-20 | ம43-20சி | கரிநாள், சந்திரதெரிசனம் மாட்டுப்பொங்கல் |
| 3 | 16 | சனி | திரி47-10 | அவி36-30 | சி36-30அ | கரிநாள் |
| 4 | 17 | ஞா | சது39-25 | சதை30-28 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 5 | 18 | திங் | பஞ்32-53 | பூரட்25-30 | ம25-30சி | ஸ்ரீபஞ்சமி |
| 6 | 19 | செவ் | சஷ்27-48 | உத்22-0 | அ22-0சித் | சஷ்டி |
| 7 | 20 | புத | சப்24-25 | ரேவ20-8 | மர60 | கும்பாயனம் 44-35, ரதசப்தமி |
| 8 | 21 | வியா | அ22-50 | அஸ்20 | அ20-0சி | பிரயாணம் விலக்க |
| 9 | 22 | வெ | நவ23-3 | பர21-35 | சித்60 | கிருத்திகை |
| 10 | 23 | சனி | தச24-55 | கி.×.—24-40 | அமி60 | கிருத்திகைஉபவாசம் |
| 11 | 24 | ஞா | ஏ28-10 | ரோ29-20 | சித்60 | மத்வ சர்வ ஏகாதசி |
| 12 | 25 | திங் | து32-50 | மிரு35-8 | அ35-8சித் | மாடுவாங்க |
| 13 | 26 | செவ் | திர38-18 | திரு41-45 | ம41-45சி | பிரதோஷம் |
| 14 | 27 | புத | சது44-28 | புன49-3 | சித்60 | கிருஷியாரம்பம் செய்ய |
| 15 | 28 | வியா | ○51-3 | பூசம்56-43 | அ56-43சி | பௌர்ணமி, தைப்பூசம் |
| 16 | 29 | வெ | பிர57-48 | ஆயி60 | மர60 | |
| 17 | 30 | சனி | துதி60 | ஆயி4-28 | ம4-28அ | |
| 18 | 31 | ஞா | துதி4-20 | மகம்12-10 | ம12-10சி | |
| 19 | 1926ஸ்ரு பிப்ரவரிமீ 1 | திங் | திரி10-38 | பூரம்19-20 | சித்60 | |
| 20 | 2 | செவ் | சது16-3 | உத்25-53 | அ25-53சி | |
| 21 | 3 | புத | பஞ்20-35 | அஸ்31-20 | ம31-20சி | |
| 22 | 4 | வியா | சஷ்23-48 | சித்35-35 | சி35-35அ | |
| 23 | 5 | வெ | சப்25-33 | சுவா38-20 | சித்60 | |
| 24 | 6 | சனி | அ25-25 | விசா39-20 | சித்60 | |
| 25 | 7 | ஞா | நவ23-23 | அனு38-28 | மர60 | |
| 26 | 8 | திங் | தச19-33 | கேட்35 50 | சித்60 | குளம் கிணறுவெட்ட |
| 27 | 9 | செவ் | ஏகா14-3 | மூலம்31-40 | அ31-40சி | மத்வ சர்வ ஏகாதசி |
| 28 | 10 | புத | துவ7-3 திர58-48 | பூரா26-5 | அமி60 | பிரதோஷம், அவமாகம் |
| 29 | 11 | வியா | சது49-53 | உத்19-25 | சித்60 | மஹாசிவாத்திரி |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சுக் சூரி குரு கே | 13உ மக-புத<br>16 ,,தனு-செ<br>17 ,, மகரம்<br>வக்ரி-சுக் | | ரா |
| புத | சனி செ | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS,